# சிறுபாணாற்றுப்படை.

இந்தச் சிறுபாணாற்றுப்படை, நக்கீரனார் முதலிய கடைச் சங்கப் புலவர்களால் இயற்றப்பட்ட பத்துப்பாட்டுக்களுள் மூன்றாவது. (பத்துப் பாட்டுக்களாவன:—திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறு பாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன. இவைகளைப் பத்துப்பாட்டு எனத் தொகுத்தவர் இன்னாரென விளங்கவில்லை.) இந்நூல் 269 அடிகளைக்கொண்ட ஆசிரியப்பாவால் இயன்றது.

சிறுபாணாற்றுப்படை என்ற தொடர் சிறுபாணை ஆற்றுப்படுத்தும் நூல் எனப் பொருள்படும். ஆற்றுப்படை - வழியிற் செலுத்துவது என ஏழாம் வேற்றுமைத் தொகை. பாணாற்றுப்படை - பாணனை யாற்றுப்படுத்துவது என இரண்டாம் வேற்றுமைத்தொகை. சிறுபாண் - பண்புத்தொகை. பாண்- பாணனுக்கு ஆகுபெயர்.



பாணர் - இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணரும் எனப் பலராவர்: இதிற் கூறப்படுபவன் - யாழ்ப்பாணன். இந்நூலுள் "இன்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ" என்றும், பெரும்பாணாற்றுப்படையில் "இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" என்றும் வருதலாலும், 'பெரும்பாணர் - குழலர் பாணர் முதலாகிய பெரிய இசைக்காரர்' என அடியார்க்குநல்லார் கூறுதலாலும், இவ் யாழ்ப்பாணரில் சிறுபாண் பெரும் பாண் என இருவகையினருண்டென்பது பெறப்படும். (சிறுபாண் - சிறிய யாழையுடையவன்.) சிறுபாணை ஆற்றுப்படுத்துவதாக வந்ததனால், இது சிறுபாணாற்றுப்படை எனப்பட்டது. இனி, பத்துப்பாட்டி லுள்ள பாணாற்றுப்படை யிரண்டனுள் இது அடியால் குறைந்திருப்பதுபற்றிச் சிறு பாணாற்றுப்படை என வழங்கலாயிற்றென்பதும் உண்டு. அடியளவினாற் சிறிய [குறைந்துள்ள] பாணாற்றுப்படை யென்க.

ஆற்றுப்படை யென்பது - கூத்தர் முதலியவர்களுள் ஒருத்தர் கொடை யாளியான ஒருத்தனிடத்துத் தாம் பெற்ற செல்வத்தை, எதிர்வந்த இரப் போர்க்கு உணர்த்தி, அவரும் அந்தக் கொடையாளியினிடஞ் சென்று தாம் பெற்றதுபோல் பொருளைப் பெறுமாறு வழிப்படுத்துவது. இந்தப் பாணாற் றுப்படை புறப்பொருளான பாடாண் திணையின் துறைகளுள் ஒன்று: இதன் இலக்கணம்— "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்" என்று தொல்காப்பியத்துக் கூறப்பட்டுள்ளது. 'சேணோங்கிய வரையதரிற், பாணனை யாற்றுப் படுத் தன்று" என்பது புறப்பொருள்வெண்பாமாலைக் கொளு. ஒவ்வொருவரும் இங்ஙனம் தாம் பெற்ற செல்வத்தை இரவலர்க்கு அறிவுறுத்தி வழிப்படுத்து தற்குஉரியராயினும், கூத்தர் முதலியோரே எதிர்வந்த கூத்தர் முதலியோர்க் குக் கூறி அவரை வழிப்படுத்துவதாகச் செய்யுள் செய்தலே மரபு: இங்ஙனம் இயற்றப்பட்டவை - கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற் றுப்படை, விறலியாற்றுப்படை என வழங்கும்.

இஃது - ஓய்மாநாட்டு நல்லியக்கோடனிடத்திற் பரிசு பெற்ற பாணனொருவன் தன்னை யெதிர்ப்பட்ட மற்றொரு பாணனை நோக்கி "பாணனே! சேர சோழ பாண்டியரின் இராசதானிகளாகிய வஞ்சிமாநகரும், உறையூரும், மதுரையும் பரிசில் தருவதிற் குறைந்தன: ஆதலால், நீ அந்நகர்களை நோக்கிச் செல்லவேண்டா: பேகன் பாரி முதலிய எழு வள்ளல்களும் மேற்கொண்டிருந்த கொடைப்பாரத்தைத் தாங்கியவனும் மாவிலங்கையை யாண்ட ஓவிய மன்னவரின் குலத்திற் பிறந்த நல்லியக்கோடனென்று ஒரு வள்ளல் இருக்கின்றான். அவன் பிடி [பெண்யானை]க்கணங்களைப் பரிசிலர்க்குக் கொடுப்பவன்: கூத்தர்களைப் பாதுகாப்பவன்: அவனிடத்துப் பரிசில் பெறும் விருப்போடே முன்பு ஒருநாள் அவனையும் அவனுடைய மலைவளத்தையும் பாடிக்கொண்டு யாம் சென்றனமாக, பலநாளாகப் பசியால் வருந்தியிருந்த எமது துயரம் அவனால் தொலைந்திட யானைகளையும் தேர்களையும் பரிசிலாகத் தரப்பெற்று, அவனிடத்தினின்று இப்போதுதான் திரும்பி வருகின்றோம். நீ கொடுப்போனை நாடிச் செல்வதாயிருந்தால் சுற்றத்தாரோடு அவனிடஞ் செல்க: செல்லும்போது வழியிடையில் நெய்தல்நிலத்துள்ள அவனுடைய எயிற்பட்டினத்திலே சேர்ந்தால் பரதவராலும், முல்லை நிலத்துள்ள அவனுடைய வேலூரை யடைந்தால் எயிற்றியராலும், மருத நிலத்துள்ள அவனுடைய ஆமூரை யடைந்தால் உழத்தியராலும், உண்ணுதற்கும் பருகுவதற்கும் உதவி உபசரிக்கப்படுவீர்: அவனுடைய இராசதானி தூரத்திலுள்ளதும் அன்று: குறிஞ்சி நிலத்ததான அங்குச் சென்று கிடக்கு எனனும் அவன் நகரின் அடையாத வாயிலினுட்புக்கு, தன்னுடைய செய்ந்நன்றியறிதல் முதலிய குணங்களை அறிஞர் முதலியோர் புகழ்ந்துகூற வீற்றிருக்கும் அந்த நல்லியக்கோடனை யடைந்து உன்னுடைய யாழை வாசித்து நீ சில வார்த்தைகளை அவனிடத்துச் சொல்வதற்கு முன்னே அவன் உடுக்க உடைகளையும் பருகத் தேறலையும் உங்கட்கு வழங்கி உணவைப் பொற்கலத்திலே யிட்டுத் தானே யூட்டுவான்: பின்பு நிதிகளோடே, உயர்ந்த பாகனோடு தேர்களையும், காளைகளையும், குதிரைகளையும், யானைகளையும், அணிகலன்களையும் வழங்கி அன்றே உங்களை விடுவான்' என்று கூறி, அந்த நல்லியக்கோடனிடம் ஆற்றுப்படுத்தியதாகச் செய்யப்பட்டது.

இதனையியற்றியவர்-இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனாரென்பவர். இடைக்கழி நாட்டிலுள்ள ஊர் பலவற்றுள் நல்லூரென்பது இந்நூலாசிரியருடைய ஊராகும். (இடைக்கழிநாடென்பது - சென்னைநகர்க்குத் தென்மேற்கிலுள்ளதாகி இப்போதும் அப்பெயருடனேயே வழங்குகின்றது.) இவருடைய இயற்பெயர் - தத்தனாரென்றும், நக்கீரர் முதலிய பெயர்களிற்போலச் சிறப்பு பொருளையுடைய 'ந' என்பது இவரது கல்விமேம்பாடு பற்றிப் பின்னர்ச் சேர்க்கப்பட்டிருக்கலாமென்றும் கருத இடமுண்டு. புறநானூற்றின் 218 ஆம் பாட்டின் ஆசிரியர் பெயரின் பாடபேதமாக நத்தத்தரென்பது காணப்படுகின்றமையால், அந்த நத்தத்தரென்பவரும், திருவள்ளுவமாலையைப் பாடிய கடைச்சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர்களுள் ஒருவராக வருகின்ற நத்தத்தரென்பவரும், நத்தத்தமென்னும் இலக்கணநூலை யியற்றிய நத்தத்தரென்பவரும் ஒருகால் ஒருவரேயாக இருக்கலாமோ என்று கருதுகின்றனர். இவருடைய காலத்திலிருந்த புலவர் - நல்லியக்கோடனைப் பாடிய புறத்திணைநன்னாகனாராவர். இவர் காலத்திருந்த பிரபுக்கள் - இந்தப் பாட்டுடைத்தலைவனாகிய நல்லியக்கோடன் தவிர, நன்னாகனாராற் பாடப்பெற்ற ஓய்மானல்லியாதனும், ஓய்மான் வில்லியாதனும், கரும்பனூர்க்கிழானும் என்பவர்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் இந்நூற்கு உரை யெழுதியுள்ளார்: பெரும்பாலும் அவ்வுரையை யாதாரமாகக்கொண்டு மாணாக்கர்க்கு விளங்குமாறு எளிய நடையில இவவுரை யெழுதப்படுகின்றது.

இந்தச் சிறுபாணாற்றுப்படையின் முதல் 40 அடிகள்—விறலியரோடும் பாண்மகனோடும் கொடுப்பாரைத் தேடிக்கொண்டு செல்லும் பாணனாகிய இரவலனை ஆற்றுப்படுப்பவன் விளித்த விளியாகும்: அங்ஙனம் பாணனை விளிக்குமிடத்து அன்னான் விறலியரோடும் பாண்மகனோடும் கொடையாளியைத் தேடிப் பாலைநிலத்துச் செல்கின்றவனென்று குறிப்பிக்க, முதலில் 12-அடிகளாற் பாலைநிலத்தையும், பிறகு 13 - முதல் 33 - வரையிலுமுள்ள அடிகளால் அதிற்சென்றுவருந்தும் விறலியரின் தன்மையையும், பிறகு 7-அடிகளால் பாண்மகன் பாலையாழை யியக்காநிற்கக் கொடுப்போரை நோக்கி வறுமையாற் செல்லும் இரவலனையும் கூறுகின்றார்.

மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை
அணி*மார்பு துயல்வரூஉ மாரம் போலச்
செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்பு விரித்தன்ன காழக நுணங்கறல்
அயிலுருப் பனைய வாகி யைதுநடந்து
வெயிலுருப் புற்ற வெம்பரற் கிழிப்ப
வேனி னின்ற வெம்பத வழிநாள்
காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதன் மராஅத்த வரிநிழ லசைஇ

(இ - ள்.) (1) பணை தோள் - மூங்கிலாகிய தோள்களையுடைய, மா மணி மலை நிலம் மடந்தை - பெருமைபெற்ற மணிகள் தங்கின மலையையுடைய பூமிதேவியின், (2) அணி மார்பு துயல் வரூஉம் ஆரம்போல - அழகிய மார்பிலே கிடந்தசைகின்ற முத்தாரம்போல, (3) செல்-செல்லுகின்ற, புனல் - நீரினால், உழந்த - வருந்தியதும், சேய்வரல் கான் யாறு (4) கொல் கரை - வெகுதூரத்திலிருந்து வருதலையுடைய காட்டியாற்றினாற் குத்தப்படுகின்ற கரையிலேயுள்ளதுமான, நறும் பொழில் - நறுமணமுள்ள சோலையினிடத்திலேயுள்ள,—குயில் குடைந்து உதிர்த்த (5) புது பூ - குயில்கள் (தமது மூக்கினாற்) குடைந்து உதிர்த்த புதிய பூக்களாகிய, செம்மல் - வாடலை, சூடி-, புடை நெறித்து - தம்மிடமெல்லாம் நெறிப்புக்கொண்டு, (6) கதுப்பு விரித்து அன்ன - மயிரை விரித்தாலொத்த, காழ் அகம் நுணங்கு அறல் - கறுப்பு நிறத்தைத் தம்மிடத்தேகொண்ட நுண்ணிய கருமணலில், (8) வெயில் உருப்பு உற்ற - வெயிலினால் வெம்மையைப் பொருந்தின, வெம் பரல் - வெவ்விய பரல், (7) அயில் உருப்பு அனைய ஆகி - வேல் காய்ந்ததை ஒத்தனவாகி, (8) கிழிப்ப - (பாதங்களைக்) கிழித்தலினால், (7) ஐது நடந்து - மெல்ல நடந்தும், (9) வேனில் நின்ற வெம் பதம் வழி நாள் - வெயிற்காலம் நிலைநின்றமையாலான வெவ்விய செவ்வியைத் தன்னிடமுடைய நாளிலே, (10) காலை ஞாயிறு கதிர் கடாவுறுப்ப - காலையிலே

* 'மூலை' என்ற பாடம், மாணாக்கர்க்காக மாற்றப்பட்டது.

தோன்றுந்தன்மையுள்ள சூரியனுடைய கிரணம் (வெம்மையைச்) செலுத்துதலைச் செய்கையினால், (11) பாலை நின்ற - வெப்பம் நிலைநின்ற, பாலை - பாலைவனமாகிய, நெடு வழி - நீண்ட [தொலையாத] வழியையுடைய, (12) சுரன் முதல் - சுரத்தினிடத்திலுள்ள, மராஅத்த - கடம்பமரத்தினுடைய, வரி நிழல் - அழகிய [செறியாத] நிழலிலே, அசைஇ - தங்கியும்,—(எ - று.)

மலைமீதினின்று பெருகும் கான்யாற்றுப் பெருக்கு நிலமகளின் முத்தாகாரம்போலு மென்பது 1 - 2 அடிகளின் பொருள்: இது - மெய்யுவமம். 3. பெருக்கினால் மரக்கிளைகள் ஆட்ட மெடுப்பதனால் 'புனலுழந்த' என்றது. கரையிலுள்ள பூஞ்சோலைகளினின்று உதிரும் புதுப்பூவாடல்களையுடைய யாற்றின் கருமணல் ஒருமகள் பூவைச்சூடிய தன் மயிரை விரித்துள்ளது போலு மென்பது, 4-6 அடிகளின் கருத்து. அந்தக் கான்யாற்றுக் கருமணலிற் பரல் குத்த விறலியர் மெல்ல நடந்தமையை, 7-8 அடிகள் கூறும்.

1 - 12: பாலை - வெப்பம்: பாலைத் தன்மையுமாம். பாலைத் தன்மை யாவது-காலையும் மாலையும் நடுப்பகலையொத்த கடுமை மிகச் சோலை தேம்பிக் கூவல் முதலிய நீர்நிலைகள்மாறி நீரும் நிழலுமின்றி நிலம் பயனைத் துறந்து பறவைகளும் விலங்குகளும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது என்பர். மராஅத்த குறிப்புப் பெயரெச்சம். கொடுப்போரைத் தேடிக்கொண்டு செல்லும் பாணனோடு அவனைச் சார்ந்த விறலியர் கான்யாற்று மணற்பாங்கான நிலத்துப் பரல் குத்த வருந்தி மெல்ல நடந்தும், பாலைவனத்துச் செல்லும்போது சூரிய வெப்பத்தால் நடக்க முடியாமற் போகவே கடம்ப மரத்தின் நிழலில் தங்கியும் இங்ஙனம் அரிதிற் செல்கின்றனர் என்க. வரி நிழல் - வரி வரியாயுள்ள நிழல்: வரி - கோடு.

முதற் பன்னிரண்டடிகளால் விறலியர் செல்கின்ற இயல்பைக் கூறிய ஆசிரியர் 13-முதல் 31-அடி வரையில் அவ்விறலியரின் முடிமுதல் அடிவரை வருணித்து, நடந்த வருத்தத்தால் அன்னோரின் காலை இளைஞர் தைவருதலை 6-அடிகளாற் கூறுவர்.

ஐதுவீ ழிகுபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பிற் கதுப்பென
மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயின்மயிற் குளிக்குஞ் சாயற் சாஅய்
உயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ
வயங்கிழை யுலறிய வடியி னடிதொடர்ந்து
ஈர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையின்
சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் *(சுணங்கு பிதிர்ந்து
யாணர்க் கோங்கி னவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென)

* இதுமுதல் வளைவினுட்பட்டவை பரீட்சைக்குப் பாடமல்ல.

வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்செறி நீர்தரு மெயிற்றி னெயிறெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமா னோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா விளையர் மெல்லத் தைவர,

(இ - ள்.) (13) ஐது வீழ் இகு பெயல - மெல்லியதாகத் துளித்துவீழ்கின்ற பெய்யுந் தன்மையுள்ள மேகத்தின், அழகு - அழகை, கொண்டருளி - (தன்னிடத்தே) கொண்டு, (13) நெய கனிந்து - எண்ணெயிலே முற்றுப் பெற்று, இருளிய - இருண்ட, கதுப்பின் - மயிரினையும்,—(15) உடன - ஒருசேர, பல (16) மயில் - பல ஆண் மயில்கள், (14) கதுப்பு என - மயிர் போல, (15) மணி வயின் கலாபம பரப்பி - நீலமணி போலுங் கண்ணைத் தன்னிடத்தே யுடைய தோகைகளை விரித்து, (அம்மகளிரின் கதுப்புக்குத் தமது தோகை ஒவ்வாமையால்), (16) மயில் குளிக்கும - பேடைமயிலுக்குள்ளே மறைதற்குக் காரணமான, சாயல் - சாயலையும்,—சாஅய் - ஒடியிளைத்து, (17) உயங்கு - வருந்துகின்ற, நாய - நாயினுடைய, நாவின - நாக்கினது, நல்ல எழில் - நல்ல அழகை, அசைஇ - வருத்தி; (18) வயங்கு இழை உலறிய - (வறுமையினாலே) விளங்குகின்ற (சிலம்பு முதலிய) அணிகலனை யணியாது பொலிவழிந்த, அடியின - பாதங்களையும்,—(19) ஈர்ந்து நிலம் தோயும் - இழுக்கப்பட்டுப் பூமியிலே படிகின்ற, இரு பிடி தடக்கையின் - கருநிறமுள்ள பெண்யானையினது பெருமையை யுடைய கை போன்று, (18) அடி தொடர்ந்து - பாதங்களோடு தொடரப்பெற்று, (20) சேர்ந்து - திரண்டு, உடன் செறிந்த - ஒன்றோடொன்று நெருங்கிய, குறங்கின் - துடைகளையும்,—குறங்கு என - துடைபோல, (21) மால் வரை ஒழுகிய - பெரிய மலையிலே ஒழுங்குபட வளர்ந்த, வாழை - (அழியாது) வாழ்தலையுடைய, வாழை - வாழையின், (22) பூ என - பூப்போல, பொலிந்த - பொலிவுபெற்ற, ஓதி - கூந்தல் முடிச்சினையும்,—ஓதி - அந்தக் கூந்தலிலே சூடிய, (23) நளி சினை வேங்கை நாள் மலர் - செறிதலைக் கொண்ட கிளைகளையுடைய வேங்கை மரத்தில்தோன்றிய அன்றுமலர்ந்த மலர் (இது என்று மயங்கி), நச்சி - விரும்பி, (24) களி சுரும்பு அரற்றும் - களிப்பினையுடைய வண்டுகள் ஆரவாரிக்கப்பெற்ற, சுணங்கின் - சுணங்கினையும்,—(சுணங்கு பிதிர்ந்து சுணங்கு பிதிர்பட்டு, (25) யாணர் கோங்கின் - புதிதாகப் பூத்தலையுடைய கோங்கினது, அவிர் முகை - விளங்குகின்ற மொட்டை, எள்ளி - இகழ்ந்து, (26) பூண் அகத்து ஒடுங்கிய - ஆபரணங்கள் இடையிலே கிடக்கின்ற, வெம் முலை - விருப்பத்தை யுடைய முலைகளையும்,—முலை என - (மகளிரின்) தனங்கள்போல), (27) வண் கோள் பெண்ணை வளர்த்த - பெரிய குலையினையுடைய பனையிலே வளர்ந்த, நுங்கின் - நுங்கினது, (28) இன் செறி நீர் - இனிய செறிந்த நீர் போன்ற நீரை, தரும் - தருகின்ற, எயிற்றின் - பற்களையும், எயிறு என - (மகளிரின) பற்போல, (29) குல்லை அம் புறவில் - கஞ்சங்குல்லையையுடைய அழகிய காட்டிடத்தே, குவி முகை அவிழ்ந்த - குவிந்த அரும்பு மலரப் பெற்ற, (30) முல்லை - முல்லையைச் சூடுதற்கு, சான்ற - அமைந்த, கற்பின் - கற்பினையும், மெல் இயல் - மெல்லிய இயல்பினையும், (31) மடம் மான் நோக்கின் - மடப்பத்தினையுடைய மான்போலும் பார்வையினையும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியினையுமுடைய, விறலியர் - விறல்பட ஆடும்

மகளிர், (32) (கீழ்க்கூறியயடி ஐதுடங்தும் வரிநிழலசைஇயும் இவ்வாறு), நடை - நடத்தலாலே, மெலிந்து - இளைத்து, அசைஇய - ஓய்ந்த, (அவர்களின்), நல் மெல் சிறு அடி - அழகிய மெல்லிய சிறிய அடியை, (33) கல்லா இளையர் - (தம் தொழிலை யொழிய வேறொன்றைக்) கற்றறியாத சிறுவர், மெல்ல தைவர - மெத்தென்று தடவவுப்,—(எ - று.)

(7) ஐதுடங்து(ம்), (12) வரி நிழலசைஇ(யும்)(31)விறலியர்(இங்ஙனம்) (32) நடை [நடத்தலால்] மெலிந்து அசைஇய (அவருடைய) சிறடியைச் (33) கல்லாவிளையா தைவரவும் என்க. (14) கதுப்பினையும்,(16) சாயலினையும், (18) அடியினையும், (20) குறங்கினையும் (22) ஓதியினையும் (24) சுணங்கினையும், (26) எயிற்றினையும், (30) மெல்லியலினையும் கற்பினையும் (31) நோக்கினையும் நுதலினையுமுடைய விறலியர் என்க. (30) கற்பினையும் என்பது இடையிலிருப்பினும், அன்வயம் காட்டுமிடத்து உடலுறுப்புக்களைச் சொல்லும் பகுதியை யெல்லாம் ஒன்று சேர்த்து, மனத்தின் நிலையால் விளையுங் குணமாகிய கற்பு இறுதியிற் காட்டப்பட்டது.

பெய்யும் மேகம் கதுப்பிற்கும், மயில் சாயலுக்கும்; நாய்நா அடிக்கும்' பிடியின்கை குறங்கிற்கும். வாழைப்பூ ஓதிக்கும், வேங்கைமலர் சுணங்கிற்கும், (கோங்கின்முகை முலைக்கும்), நுங்கினீர் எயிற்றின் நீர்க்கும், முல்லைமுகை எயிற்றுக்கும், மானின் நோக்கு நோக்கிற்கும் உவமையாம்; இங்ஙனம் தொடர்ச்சிப்பட உவமை வருவதை மாலையுவமை யென்றும் சந்தானவுவமை யென்றும் கூறுப. 'அடியின அடி தொடர்ந்து,' 'குறங்கின் குறங்கென,' 'வாழை வாழைப்பூவென,' 'ஓதி ஓதி நவிச்சினை.' சுணங்கின் சுணங்கு பிதிர்ந்து' என இவ்வாறு ஒன்றைக் கூறிவிட்டு அங்ஙனம் விட்டதை மீண்டும் பற்றிக்கொண்டு செல்லுதல், ஒற்றைமணிமாலையணியாம்: இதனை வடநூலார் ஏகாவளியலங்காரமென்பர். (14 - 16:) ஆண்மயில் மகளிரின் கூந்தலைப்போலத் தன் தோகையை விரித்தும் மகளிரின்சாயல் தமக்கு வாராமையால் வெள்கிப் பெடைமயிலில் மறையும் என்று வருணித்தவாறு. சாயல் - மென்மையென்பர். (20-22) ஓதிக்கு உவமையாகக் கூறிய வாழைப் பூவில், வாழை என்பதற்கே குறங்கு உவமையாக வந்ததனுல், இது - அடுக்கியல்வரலுவமை யென்னுங் குற்றத்திற்கு இடனாகாது: இனி, வாழைப்பூ என்பதிலுள்ள உபமேயமாகிய வாழைக்கு உபமானமாகிய குறங்கு பிடியின்கையை உபமானமாகப்பெற்று வந்திருப்பது, அடுக்கியல் வரலுவமை யென்னுங்குற்றமாகாதோவெனின்,'பிடிக்கைபோலுங்குறங்கு'என அறறபின், குறங்கென என்று தனியே எடுக்கப்படுவதனுல் குற்றமாகாதென்க; இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் இது கொள்க. (21 - 22) வாழைப்பூ மகளிர் ஓதிக்கு உவமை கூறப்படுவதை "வாழை...மகளிரோதியன்னபூவொடு" என்றவிடத்தும், வேங்கைப்பூ சுணங்கிற்கு உவமையாதலை "வேங்கைவீ, முற்றெழில்கொண்ட சுணங்கணி பூணாம்" என்றவிடத்தும் காண்க. சுணங்கு - அழகுதேமல். சுணங்கை வேங்கைமலரென மயங்கிச் சுரும்பு அரற்றுவதாயிறறென்க. (30) கற்பின்மிகுதிதோன்றமகளிர்முல்லைசூடுதல்மரபு காலத்து இயல்பு. (33) கல்லாவிளையா என்பதற்கு - சுதம் சிறுதொழிலை யன்றி வேறொரு தொழிலைக் கல்லாத இளையர் என்று உரை விரிப்பர்.

பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
35. இன்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
வைவளம் பழுநிய நயந்தெரி பாலை

கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வமொடு துயரா ற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவா யிரவல !

(இ - ள்) (34) பொன் வார்ந்து அன்ன - பொன்னை(க் கம்பியாக) நீட்டினாற்போன்ற. புரி அடங்கு நரம்பின் - முறுக்கு அடங்கின நரம்பினது; (35) இன் குரல் - இனிய ஓசையுடைய. சிறு யாழ் - சிறியயாழை, இடவயின் தழீஇ - இடப்பக்கத்தே தழுவிக்கொண்டு,—(36) நைவளம் பழுநிய - நட்டபாடையென்னும்பண் முற்றப்பெற்ற, நயம் தெரி - இனிமை தெரிகின்ற. பாலை - பாலையாழை, (37) கைவல் - வாசித்தலைவல்ல, பாண்மகன் - பாணனாகிய மகன், கடன் அறிந்து -(வாசிக்கும்) முறைமையை யறிந்து, இயக்க - வாசிக்க —(38) இயங்கா வையத்து - அசைதலில்லாத பூமியிலே, வள்ளியோர் நசைஇ பரிசில் தருவாரை விரும்பி, (39) துனி கூர் எவ்வமொடு - (தன்னை) வெறுத்தல் மிக்க வருத்தத்தோடே கூடின, துயர் - வறுமைத் துயரம். ஆற்றுப்படுப்ப - (நின்னைக்) கொண்டு போகையினாலே, (40) முனிவு இகந்து இருந்த - (வழி நடந்த) வருத்தம் நீங்கியிருந்த, முது வாய் - பேரறிவு வாய்ந்திருந்த, இரவல - இரவலனே ! (எ - று.)

(33) நைவர, (37) பாண்மகன் இயக்க, (35) சிறியாழிடவயிற்றழீஇ, (38) வள்ளியோர்நசைஇ. (39) எவ்வமொடு துயர்ஆற்றுப்படுப்ப (40) முனிவிகந்திருந்த இரவல! என்று முதல் 40 அடிகளை. பரிசில் பெற்றானொருவன் கொடையாளியைத் தேடித்திரியும் பாணனை விளித்ததாக முடிபு காண்க. யாழின் நரம்பை 'பொன்வார்ந்தன்ன' என்று வருணிப்பதைப் பல இடங்களிற் காணலாம்: இயங்குகின்ற வையத்திலும் வேறுபாடு தோன்ற 'இயங்காவையம்' என்றார்: பாயாவேங்கையன்றாற் போன்ற பிறதுறிப்பு இது: இனி; பரிசில் தருவார்கிடையாமையால் பரிசிலர் இயங்காத வையமென்று உரைப்பாருமுளர். இசையிற் பேரறிவு படைத்திருத்தலால், 'முதுவாயிரவல' என்றது.

பரிசில் பெற்று வந்தவன் இங்ஙனம் இரவலனை விளித்து, 'நீ சேரர் முதலியோரின் இராசதானியிற் செல்லுதலிற் பயனில்லையென்று கூறுபவனாகி, முதலில் (41 50) வஞ்சியிற் செல்லுதலிற் பயனில்லை யென்கின்றான்:

கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
பைங்கறி நிவந்த பலவி னிழல்
மஞ்சண் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
விளையா விளங்க ணுற மெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்
குடபுலங் காவலர் மருமா னொன்னார்
வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
எழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே:

(இ - ள்.) (41) கொழு மீன் குறைய ஒதுங்கி - கொழுவிய மீன் துண்டுபடும்படி நடந்து; வள் இதழ் (42) கழுநீர் மேய்ந்த - வளப்பமுள்ள இதழையுடைய செங்கழுநீர்ப்பூவைத் தின்ற, கய வாய் - பெரிய வாயையுடைய

எருமை—,—(43) பைங் கறி நிவந்த பலவின் நீழல் - பசிய மிளகின்கொடி படர்ந்த பலாமரத்தின் நிழலிலே, (44) மஞ்சள் மெல் இலை மயிர் புறம் தைவர - மஞ்சளினது மெல்லிய இலை (தனது) மயிரையுடைய முதுகைத் தடவாநிற்க, (45) விளையா இள கள் நாற மெல்குபு பெயரா - முற்றாத இளைய தேன்மணம் வீசுமாறு மென்று அசையிட்டு—(46) குளவி பள்ளி பாயல் கொள்ளும் - காட்டுமல்லிகையாகிய படுக்கையிலே துயில்கொள்ளுதற்கு இடனான. (47) குட புலம் - மேற்றிசைக்கண்ணுள்ள நிலத்தை, காவலர் - காத்தற்றொழிலையுடையசேரரின். மருமான் - குடியிலேயுள்ளவனாகி,—ஒன்னார் (48) வடபுலம் இமயத்து வாங்கு வில் பொறித்த - பகைவருடைய வடக்கின்கணுள்ளதாகிய இமயமலையிலே வளையும்வில்லை அடையாளமாக நாட்டிய, (49) எழு உறழ் திணி தோள் - இரும்புத்தூணோடு மாறுபடுகின்ற திணிந்த தோளையுடைய, இயல் தேர் குட்டுவன் - நடக்கின்ற தேரையுடைய குட்டநாட்டையுடையோனின், (50) வரு புனல் - பெருகுகின்ற நீரையும், வாயில் - கோபுரவாயிலையுமுடைய, வஞ்சியும்—, வறிது - (பரிசில் தருவதிற்) சிறுமையுடையதாயிருக்கும், (எ - று.)

(41 - 46) 'கொழுமீன்...கொள்ளும்' என்ற தொடர், குடபுலத்துக்கு அடைமொழி. வஞ்சியென்பது - சேரரின் தலைநகரம்: திவாகரம் முதலிய நிகண்டுகளில் வஞ்சியென்பது கருவூரெனக் கூறப்பட்டுள்ளது. எருமை, மீன்கள் துண்டுபடும்படி நடந்து நீர்நிலையிற் படர்ந்துள்ள கழுநீரை மேய்ந்திட்டு, மிளகுகொடி படர்ந்த பலாமரத்தின் நிழலிலே அருகிலிருக்கும் மஞ்சளினிலை முதுகைத் தடவா நிற்க, காற்றின் வசத்தாலடித்துக்கொண்டு படுக்கைபோலமைந்த காட்டுமல்லிகைகளிற் படுத்துக்கொள்ளுதற்கு இடனான குடபுலமென்க. (குடபுலம் சேரர்க்கும், தென்புலம் பாண்டியர்க்கும், குணபுலம் சோழர்க்கும் உரியன.) குட்டநாட்டையுடையரான சேரரிற்சிலர் வடதிசைமேற் படையெடுத்துச் சென்று அத்திசை வேந்தரை வென்று தாம் அங்ஙனம் அவர்களைவென்றமைக்கு அடையாளமாகத் தமது விற்கொடியை இமயத்தின்மீது பொறித்தனரென்க. பொறித்தல் - அடையாளமாக வைத்தல்.

இனி, (50-67) பாண்டியன் தலைநகராகிய மதுரையிற் செல்வதிற் பயனில்லை என்கிறான்;—

அதாஅன்று
நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்து
அறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத
கைபுனை செப்பங் கடைந்த மார்பின்
செய்பூங் கண்ணி செவிமுத லிருத்தி
நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பின்
உளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடும்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
தென்புலங் காவலர் மருமா னொன்னார்

மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே:

(இ - ள்.) (50) அது அன்று - அந்த வஞ்சியென்னும் ஊரேயல்லாமல், (51) நறவு வாய் உறைக்கும் - தேனை (மலர்கள்) தம்மிடத்தினின்று துளிக்கப்பெற்ற, நாகு முதிர் நுணவத்து - இளமை முதிர்ந்திட்ட நுணா மரத்தினது, (52) அறை வாய் - வெட்டின வாயையுடைய, குறு துணி - குறிய மரக்கட்டையை, அயில் உளி (53) கடைந்த - கூர்மையையுடைய உளிகள் கடைந்து உண்டாக்கிய, கைபுனை - (சாதிலிங்கம் வழித்து) அழகாக்கின, செப்பம் - செப்பு என்னும் அணி, (52) பொருத - சேர்ந்துள்ள, (53) மார்பின் - மார்பினையுடையவாய்,—(54) செய் பூ கண்ணி செவி முதல் திருத்தி - (சடையினால்) செய்த பூவினாலியன்ற நெற்றி மாலையைக் காதுகளினடியிலே திருத்தமாக வைக்கப்பெற்று, (55) நோன் பகடு உமணர் ஒழுகையொடு வந்த - வலிய எருதையுடைய உப்புவாணிகரின் வண்டி யொழுங்கோடு கூடவந்த, (56) மகாஅர் அன்ன-(உமட்டியர் வளர்த்தலால் அவருடைய) பிள்ளைகளையொத்த, மந்தி - குரங்குகள், (அவ்விடத்து); மடவோர் (57) நகாஅர் அன்ன நளி நீர் முத்தம் (58) வாள் வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி - மகளிரின் பற்களை யொத்த செறிந்த நீரையுடைய முத்துக்களை வாளின்வாய்போலும் வாயையுடைய கிளிஞ்சிலின் வயிற்றிடத்தே யிட்டு மூடி,—(59) தோள் புறம் மறைக்கும் நல்கூர் நுசுப்பின் - தோள்கள் (தாம் இறுகத்தழுவி ஊற்றின்பம் பெற்றறியாது என்று நேர்ந்த) பழிச் சொல்லைப் போக்கும் நுண்ணியதான இடையைக் கொண்ட, (60) உளர் இயல் ஐம்பால் உமட்டியர் - அசைகின்ற தன்மையை யுடைய கூந்தலையுடைய உப்பு வாணித்தியர், ஈன்ற - பெற்ற, (61) கிளர் பூண் புதல்வரொடு - விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த பிள்ளைகளுடனே, கிலுகிலி ஆடும் - கிலுகிலுப்பை கொண்டு விளையாடுதற்கு இடனான, (62) தத்து நீர் வரைப்பின் - (அலை) முறிகின்ற நீரை(த் தனக்கு) எல்லையாக வுடைய, கொற்கை - கொற்கை யென்னும் ஊர்க்கு, கோமான் - அரசனும், (63) தென் புலம் காவலர் மருமான் - தெற்குத் திசையிலுள்ளதான நிலத்தைக் காத்தற்றொழிலை யுடையாரின் குடியிலுள்ளோனும், ஒன்னார் (64) மண் மாறு கொண்ட - பகைவரின் நிலத்தை மாறுபாட்டாலேகைக்கொண்ட, மாலை வெண் குடை - முத்தமாலையை யுடைய வெண்கொற்றக் குடையையும், (65) கண் ஆர் கண்ணி - கண்ணிற்கு நிறைந்துதோன்றுகின்ற கண்ணியினையும், கடு தேர் - விரைந்து செல்லுந் தேரினையுமுடைய, செழியன்-பாண்டியனுடைய, (66) தமிழ் நிலைபெற்ற - தமிழ்ப்பாஷை நிலையாகவீற்றிருக்கின்ற, தாங்கு அரு மரபின் (67) மகிழ் நனை - தாங்குதற்கு முடியாத [மிக அதிகமான] நிலைமையினையுடைய மகிழ்ச்சி தோன்றப்பெற்ற, மறுகின் - தெருவினையுடைய, மதுரையும்—, வறிது - (கொடுக்கும் பரிசில்) அளவுபட்டதாகவிருக்கும்: (எ - று.)

கோமான் (62) மருமான் (63) செழியன் (65), மதுரையும் வறிது (67) என முடிவு காண்க. மதுரை - பாண்டியரின் இராசதானி. (64) மாலை வெண்குடையையும் (65) கண்ணார் கண்ணியையும் கடுந்தேரையுமுடைய (63) ஒன்னார் (64) மாண்மாறுகொண்ட (65) செழியன் என்க. தமிழ் நிலைபெற்றதனால் மதுரையில் தாங்கரு மரபின் மகிழ்ச்சி தோன்றுவ

தாயிற்று. (51 - 62) உமட்டியரால் தமது மக்கள் போல வளர்க்கப்பட்டு உமணரின் வண்டிவரிசைகளோடு வந்த மந்திகள் கிளிஞ்சிலின் வயிற்றிடத்து முத்துக்களை யிட்டு மூடி அங்ஙனம் மூடியவற்றைக் கிலுகிலுப்பையாகக் கொண்டு உமட்டியருடைய சிறுவருடனே விளையாடுதற்கு இடனாகித் தத்துநீரை வரப்பாகக் கொண்டுள்ளது கொற்கை யென்கிறார். பாண்டிய நாட்டிலுள்ள கொற்கை, ஓர் கடற்கரைப் பட்டினம்.

(53 - 58) மடவாரால் தமது மக்களைப்போல வளர்க்கப்பட்ட மந்திகள் நுணாமரத்திலிருந்து வெட்டியெடுத்த கட்டைகளின் சிறுதுண்டைக் கடைந்து சாதிலிங்கந் தோயத்துச் செய்த செப்புஎன்னும்அணிகலன் மார்பில் தொங்கவிடப்பெற்று. சடையினாலியன்ற நெற்றி மாலையைச் செவியடியிலே திருத்தமாகக் கட்டப்பெற்று உப்புவாணிகருடைய வண்டிகளின் வரிசையோடு வந்தன வென்க. செப்பு என்பது பவழத்தாவடம்போலக் காணப்படும் ஒருவகை யாபரண மென்று தோன்றுகின்றது. குரங்குகளை வளர்ப்போர் இக்காலத்திலும் அதற்குச் சிலவகை அணிகலனைப் பூட்டுதல் இங்குக் கருதத்தக்கது. இனி, செப்பம் என்பதற்கு செந்நிறமெனக் கொண்டு. நுணாக்கட்டையைக் கடைந்து அலங்கரித்தாற்போன்ற செந்நிற மார்பினையும் கண்ணையையு முடைய மந்தியென ஒருவகைக் குரங்குச்சாதி விசேடத்தைக் கூறியதெனக் கொள்வாரு முளர். அன்று - அன்றி என்பதன் திரிபு. அது + அன்று = அதான்று: "அது முன்வருமன்றான்றாந் தூக்கின்" என்பது விதி: அத்தொடர் அளபெடுத்ததென்க. நகாரி - சிரிப்பு: பல்லுக்கு ஆகுபெயர். தொண்டைநாட்டவராகிய ஆசிரியர் 'தமிழ்நிலை பெற்ற தாங்கருமரபின் ...மதுரை' என்று கூறியதூஉம், பாராட்டுதற்கு உரியது. நல்கூர்ந்த - வறுமையான: இலக்கணையால், நுண்ணிய என்ற பொருளை யுணர்த்திற்று: தோள் இறுகத் தழுவி ஊற்றின்பத்தை [ஸ்பர்ச சுகத்தை] நுண்ணிய இடுப்புக்குத் தருமெனபது; தோள்புறமறைக்கும் நுசுப்பு என்பதன் பொருள்.

இனிச் (67 - 83) சோழனுறையூரும் வறிதாயிருக்கு மென்கிறார்:—

அதாஅன்று
நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் றுணையார் கோதை
ஓவத் தன்ன வுண்டுறை மருங்கின்
கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்
*(வருமுலையன்ன) வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை
ஆசி லங்கை யரக்குத் தோய்ந்தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை
ஏம வின்றுணை தழீஇ யிறகுளர்ந்து
காமர் தும்பி காமரஞ் செப்புந்
தண்பணை தழீஇய தளரா விருக்கைக்
குணபுலங் காவலர் மருமா னொன்னார்
ஓங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியும்
தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை

*முதலிரண்டு சீர் பரீட்சைக்குப் பாடமில்லை.

நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை யுறந்தையும் வறிதே.

(இ - ள்.) (67) அது அன்று-அந்த மதுரையென்னும் ஊரேயன்றி,—(68) நறு நீர் பொய்கை - நறுமணமுள்ள நீரையுடைய பொய்கையின், அடை கரை - நீரடைந்த கரையிலே, நிவந்த-ஓங்கிவளர்ந்த, (69) துறு நீர் கடம்பின் - நெருங்குகின்ற தன்மையையுடைய கடம்பமரத்தின், துணை ஆர் கோதை - இணைதல் நிறைந்த மாலைபோலப்பூத்த மலர்கள், (71) கோவத்து அன்ன கொங்கு - இந்திரகோபத்தையொத்த தாதுகளை, சேர்பு உறைத்தலின் - (தன்னிடத்து) ஒரு சேர உதிர்த்தலால், (70) ஓவத்து அன்ன - சித்திரத்தையொத்துத் தோன்றுகின்ற, உண் துறை மருங்கின் - உண்ணுநீர்த்துறையிடத்திலே நின்ற, (72) (வரு முலை அன்ன)வள் முகை உடைந்து - (எழுகின்ற முலையை யொத்த) வளப்பமுள்ள மொட்டு நெகிழ்ந்து, (73) திருமுகம் அவிழ்ந்த தெய்வம் தாமரை - அழகினையுடைய முகம்போல மலர்ந்த தெய்வத் தன்மையையுடைய தாமரை மலரினிடத்தில், (74) ஆசு இல் அகம் கை அரக்கு தோய்ந்து அன்ன - குற்றமில்லாத அகங் கையைச சாதிலிங்கந்தோய்த்தாலொத்த, (75) சேய் இதழ் பொதிந்த - செந்நிறவிதழ் சூழ்ந்த, செம் பொன் கொட்டை - செம்பொன்னாற் செய்தா லொத்த கொட்டையாகிய பீடத்திலே, (76) ஏமம் இன் துணை தழீஇ - (தன்னுயிர்க்குச்) காவலாகிய இனிய பெடையைத் தழுவிக்கொண்டு, (77) காமர் தும்பி - விருப்பம் மருவின ஆண் வண்டுகள், (76) இறகு உளர்ந்து - (தமது) சிறகுகளை அசைத்துக்கொண்டு, (77) காமரம் செப்பும் - சீகாமர மென்னும் பண்ணைப் பாடுதற்கு இடனான, (78) தண் பணை - குளிர்ந்த வயல்களையுடைய மருதநிலம், தழீஇய - தழுவிய, தளரா இருக்கை - அசை யாத குடியிருப்பினையுடைய, (79) குண(க்கு)புலம் - கிழக்கிடத்திலுள்ள நிலத்தை, காவலர்-காத்தற்றொழிலையுடையவரின், மருமான்-குடியிலுள்ளோ னும்,—(80) ஓங்கு எயில் கதவம் உருமு சுவல் சொறியும் - ஓங்கியமதிலின் கதவில் உருமேறு (தன்) கழுத்தை (த் தினவால்) தேய்க்கின்ற, (79) ஒன்னார் (81) தூங்கு எயில்-பகைவரின் (வானத்துச) சஞ்சரிக்கின்ற எயிலை, எறிந்த - அழித்த, தொடி விளங்கு தட கை-தோடா எனனும் அணி விளங்கு கின்ற பெருமையையுடைய கைகளையும், (82) நாடா நல் இசை - (ஐயுற்று) ஆராயப்படாத (உலகறிந்த) சிறந்த புகழையும், நல் தேர் - நல்ல தேரினையு முடைய, செம்பியன்-சோழனது, (83) ஓடா பூட்கை-(தன்னிடத்திருந்தோர்) ஓடாமைக்குக் காரணமாகிய மேற்கோளினையுடைய, உறந்தைஉம் - உறை யூரும், வறிது - (தான் தரும்) பரிசிலில் சிறிதாயிருக்கும்; (எ - று.)

பொய்கையிற்பூத்த தாமரைமலரின் பொகுட்டில் தன் பெடையைத் தழுவிக்கொண்டு தும்பி காமரஞ் செப்பும் தண்பணைதழீஇய இருக்கையினது குணபுலம் என, (68) 'நறுநீர்ப் பொய்கை' என்பது முதல் (78) 'தண்பணை தழீஇய தளராவிருக்கை' எனபது வரையில், குணபுலத்தின் சிறப்புக் கூறப்படுகின்றது. தண்பணை - குளிர்ந்த வயலையுடையது என மருதத்திற்குப் பண்புத்தொகையனமொழி. (68 - 73) கரையிலோங்கிய கடம்பினுடைய மலரின் செந்நிறத்தாதுகள் சேரப்பெற்ற உண்டுறை, சித்திரத்தை யொத் திருக்குமென்க. திருமகளுக்கு உறைவிடமாதலால், 'தெய்வத் தாமரை' என்றது. (80) 'ஓங்கெயிற்கதவம் உருமுச்சுவல்சொறியும்' என்ற ஒன்னார் எயிலின்கதவம் வானத்து ஓங்கிய தன்மையை விளக்கினர். (83) உறந்தை - உறையூரென்பதன் மரூஉ. உறந்தைக்கு 'ஓடாப் பூட்கை' என அடைமொழி

கொடுத்தது - அவ்வூர்க்கோழி வெளிநாட்டு யானையை வெல்லும் வலிபடைத் தமையாலாகும்: இதனை "முறஞ்செவி வாரணம் முன்சமமுருக்கிய, புறஞ் சிறை வாரணம் புக்கன புரிந்தென்" என வரும் சிலப்பதிகாரத்து நாடுகாண் காதை யடிகளாலும் உணர்க.

திரிபுரத்து அசுரர்போல முன்னொரு காலத்தில் சில அசுரர்கள் ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுள்ள தெய்வத்தன்மையுடைய மூன்றுமதில்களை வரத்தாற் பெற்று அவற்றினுள் தாம் சிறிதும அச்சமின்றிச் சிறந்த பாதுகாப்போடு இருந்துகொண்டு அந்நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிற் பறந்துசென்று பல இடங்களையும் பாழாக்கி நிலவுலகத்தை வருத்தித் தேவர்களையும் அச்சுறுத்தி வருகையில், அகத்தியமுனிவனுடைய சொல்லினால் சிவபிரான்போல ஒரு சோழராசன் கோபங்கொண்டு சென்று பொருது அம்மதில்களை யழித்தனனென்பது, (81, 82) தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன் என்பதிலுள்ள வரலாறு.

இனி, (83-தொடங்கி 143 வரை) நல்லியக்கோடனென்பானிடத்து இரவலனை ஆற்றுப்படுத்தவெண்ணுகின்றவன் அந்த நல்லியக்கோடன் ஏழுவள்ளல்களின் ஈகைக்குணத்தையுங் கொண்டுள்ளோனென்று கூறி அவனைத் தான் சென்று கிட்டிப் பரிசில் பெற்றுவருவதனைக் கூறுகின்றான்:

ஏழுவள்ளல்களில் பேகன்.

அதாஅன்று
வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
அருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும்

(இ - ள்.) (83) அது அன்று - அவ்வூரேயல்லாமல்,—(84) வானம் வாய்த்த - மழை பொய்யாமற்பெய்கையினாலே யுண்டான, வளம் - செல்வத்தையுடைய, மலை கவாஅன் - மலைப்பக்கத்திலே, (85) கானம - காட்டிடத்தே திரிகின்ற, மஞ்ஞைக்கு - மயிலுக்கு, கலிங்கம் நல்கிய - போர்வையைக் கொடுத்த, (86) அரு திறல் அணங்கின் - (பெறுதற்கு) அரிய வலிமையையுடைய வடிவினையுடைய, ஆவியர் பெரு மகன் - ஆவியர் குலத்துத் தோன்றிய பெருமைபெற்ற மகனாகிய, (87) பெரு கல் நாடன் பேகன்உம் - பெரிய மலைநாட்டையுடையவனாகிய பேகனென்னும் வள்ள லும்;—(எ - று.)

ஆவியர் குலத்தில் பிறந்தவனும் மலைநாட்டையுடையவனும் நல்லூர்க்கு உரியவனுமான பேகனென்னும் வள்ளல் காட்டினிடத்திலே மயிற்பறவை யொன்று கூவியதாக, அது குளிர்க்கு வருந்திக் கூவியதென்று இரக்கங் கொண்டு அதற்குப் போர்வை கொடுத்தானென்பதை "உடாஅபோராவாகுத லறிந்தும, படாஅமஞ்ஞைக்கீத்த எம்கோ......கலிமான்பேகன்" என்று வரும் புறநானூற்றினாலும் அறியலாம்: இங்ஙனம் இன்னதற்கு இன்னது கொடுப்பதென்ற வரையறைகொள்ளாது கொடுப்பது, கொடைமடமெனப் படும்.

பாரி.

சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்

சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி வீழுஞ் சாரல்
பறம்பின் கோமான் பாரியும்

(இ - ள்.) (87) சுரும்புஉண - வண்டு உண்ணும்படி. (88) நறு வீ - நறிய பூ, உறைக்கும் - (தேனைத்) துளிக்கின்ற, நாகம் - சுரபுன்னையை யுடைய, நெடு வழி - நெடிய வழியில் நின்ற, (89) சிறு வீ முல்லைக்கு சிறிய மலர்களையுடைய முல்லைக்கொடிக்கு, பெரு தேர் நல்கிய - பெரிய தேரைக் கொடுத்த, (90) பிறங்கு வெள் அருவி வீழும் சாரல் (91) பறம்பின் கோமான் - விளங்குகின்ற வெள்ளிய அருவி குதிக்கின்ற பக்கத்தினையுடைய பறம்புமலைக்குத் தலைவனாகிய, பாரிஉம் - பாரியென்ற வள்ளலும்,—(எ - று.)

பாரியென்பவன் உழுவித்துண்ணும் வேளிரைச் சேர்ந்தவன்: முந்நூறு ஊர்களையுடைய பறம்புநாட்டிற்கும் பறம்புமலைக்குந் தலைவன். முந்நூறு ஊர்களையும் இரவலர்க்குத்தந்த இவன் ஒருகால் காட்டின்வழிச் செல்லுகையில் முல்லைக்கொடி கொழுகொம்பின்றி இருப்பது கண்டு ஓரறிவுயிராகிய அதன்மீது கருணைகொண்டு அம்முல்லைக்கொடி இனிது படருமாறு அதனருகே தன் தேரை நிறுத்திவிட்டுக் கால்கள் சிவப்பூர நடக்கலானு னென்பர். இவன் முல்லைக்குத் தேர்கொடுத்த செய்தி, "பூத்தலையறாஅப் புன்கொடிமுல்லை, நாத்தழும்பிருப்பப பாடாதாயினும், கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த, பரந்தோங்கு சிறப்பிற் பாரி" என்று புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளது. பாரி பெருவள்ளலாதல் 'கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்ற தேவாரத்தானும் பெறப்படும்.

## காரி.

கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த
அழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேல்
கழறொடித் தடக்கைக் காரியும்

(இ - ள்.) (91) கறங்கும் மணி (9 ) வால் உளை புரவியொடு ஒலிக்கும் மணியினையும் வெள்ளிய பிடரிமயிரினையுமுடைய குதிரையோடே, வையகம்- (தனது) நாட்டையும் மருள - (மறையோர் கேட்டு) வியக்கும்படி, (93) ஈரம் நல் மொழி-அருளினையுடைய நல்வார்த்தையுடனே, இரவலர்க்கு ஈந்த - யாசகர்கட்குக் கொடுத்தவனான, (94) அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடு வேல் - சினத்தீ விளங்கித தோன்றுவதும் அச்சந்தோன்றுவதுமான நெடிய வேலினையும், (95) கழல் தொடி தட கை - உழலுகின்ற தொடியையணிந்த பெருமையையுடைய் கையினையுமுடைய, காரிஉம் - காரியென்ற வள்ளலும்;—(எ - று.)

பெண்ணையாற்றங்கரையிலுள்ள மலாடென்று வழங்கும் மலையமானாட்டின் அரசனும் முள்ளூர்மலையையுடையவனும் கோவலூரை இராசதானியாகக் கொண்டவனுமான காரியென்பவன் தன்னூர்களை இன்மொழியோடு இரவலர்க்கு ஈந்தனனென்க. இவனுடைய கொடைச் சிறப்பு "அரிவை தோளளவல்லதை, நினதெனவிலை," 'ஈத்தவிழை யணிநெடுந்தேர், பயன் கெழுமுள்ளூர்மீமிசைப், பட்டமாரியுறையினும்பலவே" என்பன முதலிய

வற்று லறிக. இவன் மலையமான் திருமுடிக்காரி எனவும், மலையமா னெனவும், காரி எனவும் வழங்கப்படுவான்.

ஆய்.

நிழறிகழ்
நீல நாக நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி யாயும்

(இ - ள்.) (95) நிழல் திகழ் - ஒளிவிளங்குவதும், (96) நீலம் - நீல நிறத்தையுடையதும், நாகம் நல்கிய - பாம்பு ஈன்று கொடுத்ததுமான, கலிங்கம் - உடையை, (97) ஆல் அமர் செல்வற்கு - ஆலின்கீழிருந்த இறைவனுக்கு, அமர்ந்தனன் கொடுத்த - நெஞ்சுபொருந்திக்கொடுத்த, (98) சாவம் தாங்கிய சாந்து புலர் திணி தோள் - வில்லைத்தாங்கியதாகிச் சந்தனம்பூசப் பெற்றுப் புலர்ந்த திண்ணியதோளினையும், (99) ஆர்வம் நல் மொழி - (கேட்டோர்க்கு) விருப்பத்தைச் செய்யும் நன்றாகிய சொல்லினையுமுடைய, ஆயஉம் - ஆயென்னும் வள்ளலும்;—(எ - று.)

ஆய்என்பவன், இருவகை வேளாளரில் உழுவித்துண்போர்வகையினன்; அரசரால் கொடுக்கப்படும் வேளென்னும் உரிமையடைந்தோன்; சிறந்தவீரன்; பொதியின்மலைத்தலைவன்: அதனருகேயுள்ள ஆய்குடியென்பது இவனுடையவூர்; ஆய்அண்டிரனென்றும், அண்டிரனென்றும் இவன்பெயர்வழங்கும்; பாணர்க்கும் இரவலர்க்கும் யானைகளையும் பிறவற்றையும் மிகுதியாகக் கொடுத்தோன்; கொங்குநாட்டாரோடு போர்செய்து அவர்களைப் புறங்காட்டியோடச்செய்தோன்; யாதொரு பயனையுங் கருதாது இரவலர்க்குக்கொடுத்து மகிழ்வித்தலையே கடனாகவுடையோன்; பாம்புபெற்றுக்கொடுத்த நீலவுடையினை ஆலின்கீழெழுந்தருளிய தலைவற்கு [பரமசிவனுக்கு]க் கொடுத்தவன். இவனுடைய நற்குணநற்செய்கைகளைக் கண்டு மனமுருகிப் புலவர்கள் இவனைப் பாடியனவாகப் புறநானூற்றில் 15-பாடல்கள் உள்ளன. சாவம் - சாபமென்ற வடசொல்லின் சிதைவு.

அதிகன்

மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த
உரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல்
அரவக் கடற்றானை யதிகனும்

(இ - ள். (99) மால் வரை - பெருமையையுடைய மலையின், (100) கமழ் பூ சாரல் - கமழும் மலர்களையுடைய சாரலிலேநின்ற, கவினிய - அழகு பெற்ற, நெல்லி - நெல்லியினது, (101) அமிழ்து விளை தீம் கனி - அமிழ்தத்தின் தன்மை (தன்னிடத்தே) யுண்டான இனிய பழத்தை, (தான்நுகர்ந்து நெடுநாள் உயிர்வாழ்ந்திருக்கப்பெறுமல்), ஔவைக்கு ஈந்த - ஔவைக்குக் கொடுத்தவனும், (102) உரவு சினம் கனலும் ஒளி திகழ் நெடு வேல் - வலியினையுடைய கோபம் நின்றெரிகின்றதும் ஒளிவிளங்குகின்றதுமான நெடியவேற்படையினையும், (103) அரவம் கடல் தானை - ஆரவாரத்தையுடைய கடல்போலுந் தானையையுமுடைய, அதிகன்உம் - அதிகனென்னும் வள்ளலும்;—(எ - று.)

சேரமானுக்கு உறவினனும் குதிரைமலைக்கும் தகடூர்க்கும் உரியவனுமான இந்த அதிகமான்நெடுமானஞ்சியென்பவன் உண்டாரை நெடுங்காலம் பிழைத்திருக்கச்செய்வதாகிய நெல்லிக்கனியை அரிதிற்பெற்றும் அதனை ஔவைக்கு ஈந்தானென்பதை, புறநானூற்றில்வரும் ஔவைபாடலாலும் அறிக. இவன் அதிகமான் தகடூர்பொருது வீழ்ந்த எழினியென்றும், எழினியென்றும் வழங்கப்பட்டுள்ளான். இந்த அதிகன், வேலையும் கடற்றானையையுமுடையவனென்க. உரவுச்சினம் என்பதற்கு - தன்னிடத்துறையுங் கொற்றவையது வலியினையுடைய சினம் என்று விசேடப்பொருளுரைப்பர். கொற்றவை படைக்கலத்து உறைவாளென்பது, நூற்கொள்கை. இந்தக்கொற்றவை, வெற்றிக்குஉரிய பெண்தேவதை.

நள்ளி.

கரவாது
நட்டோ ருவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும்

(இ - ள்) (103 கரவாது - (தன்மனத்துநிகழ்வனவற்றை) மறையாது சொல்லி. (104) நட்டோர் உவப்ப - நட்புச்செய்தோர் மனமகிழும்படி, நடை பரிகாரம் (105) முட்டாது கொடுத்த (அவர்களின் இல்லறம்) நடப்பதற்குவேண்டிய பொருள்களைத் தட்டுப்படாது (நாடோறும்) கொடுத்து வந்த.—முனை விளங்கு - பகைப்புலத்தே (கொலைத்தொழிலால்) விளங்குகின்ற. தட கை - பெருமையையுடைய கையையும். (106) துளி மழை பொழியும் வளி துஞ்சு நெடு கோடு (107) நளி மலை நாடன் - துளியையுடையமழை (பருவந் தவறாது) பெய்கின்றதும்(உயர்ச்சியாற்) காற்றுத்தங்கும் நெடிய சிகரங்களை யுடையதுமான .செறிந்த மலைநாட்டையு முடையனாகிய, நள்ளிஉம் - நள்ளியென்னும் வள்ளலும்,—(எ - று.)

நள்ளியென்பவன் தோட்டியென்னும் மலைக்கும் அதனைச்சார்ந்த நாட்டிற்கும் தலைவன்: இவன் கண்டீரக்கோப் பெருநள்ளியெனவும், கண்டீரக்கோப்பெருநள்ளியெனவும் வழங்கப்படுவான். இவன் சிறப்பை. 'காட்டில் வேட்டத்துக்குச் சென்று வேடுவக்கோலத்தைக் கொண்ட இவன், வேற்று நாட்டிற்கு நடந்துசென்ற எனது வருத்தத்தையும் உலைவையும் நோக்கிக் கைகவித்திருந்தி உண்ணத்தந்து, பின்னும்போகத்தொடங்குகையில் காட்டு நாட்டேமான எம்மிடத்து வேறுபொருளில்லையென்று வருந்தித் தன் மார்பிலணிந்த ஆரத்தையும் கையிலணிந்த கடகத்தையும் தன்னை யின்னானென்று தெரிவிக்காமலே ஈந்தான்' என்று வன்பரணர் பாடியுள்ளார்.

ஓரி.

நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை யோரியும்

(இ - ள்.) (107) நளி சினை - செறிந்த கொம்புகளிடத்தே, (108) நறும் போது கஞலிய - நறியமலர்கள் நெருங்கின, நாகு முதிர் - இளமை முதிர்ந்த,

நாகத்து - சுரபுன்னையையும், (109) குறு பொறை-குறிய மலைகளையுமுடைய, நல் நாடு நன்றாகிய நாடுகளை, கோடியர்க்கு - கூத்தாடுவோர்க்கு, ஈந்த - கொடுத்த, (110) காரி குதிரை காரியொடு உம் மலைந்த - காரியென்னும் குதிரையையுடைய காரியென்னும் பெயரை யுடையவனுடனே போர்செய்த, (111) ஓரி குதிரை ஓரி உம்-ஓரியென்னும் பெயரையுடைத்தாகிய குதிரையை யுடைய ஓரியென்னும் வள்ளலும்.—(எ - று.)

ஓரியென்னும் வள்ளல். கொல்லிமலைக்கும் அதனைச்சார்ந்த நாட்டிற்கும் தலைவன்: இவன் ஆதனோரிஎனவும் வல்விலோரியெனவும் கூறப்படுவன். இவன்கொடைச்சிறப்பை, இவன் வேட்டுவக் கோலத்துடன் காட்டில் வேட்டையாடுகையிற் பாணன் தன் கூட்டத்துடனே பாடிப்புகழத்தொடங்க, அதற்குஇடந்தராது உணவுதந்து பொன்முதலியனவுந் தந்தானென்று புறநானூற்று வருவதனாலும் அறியலாம். காரி இந்த ஓரியுடன் பொருது இவனைக் கொன்றானென்ற செய்தி, "முன்னூர்மன்னன் கழறொடிக்காரி, செல்லாநல்லிசை நிறுத்தவல்வில், ஓரிக்கொன்று" என வரும் அகநானூற்றடிகளாற் பெறப்படும்.

வள்ளல் எழுவரைக்கூறியபின், அவ்வெழுவர்களுடைய கொடைத் தொழிலை மேற்கொண்டுள்ளான் ஓவியர்குலத்துத் தோன்றிய நல்லியக் கோடன் என்று 111-முதல் 126-வரை அடிகளாற் கூறுவன்:—

எனவாங்கு
எழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோள்
எழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒருதா னாங்கிய வுர னுடை நோன்றாள்
நறுவீ நாகமு மகிலு மாரமும்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய
பொருபுன றரூஉம் போக்கரு மரபின்
தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மாவிலங்கை மன்னருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்
களிற்றுத் தழும்பிருந்த கழறயங்கு திருந்தடிப்
பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கைப்
பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை
நல்லியக் கோடனை

(இ - ள்.) (111) என - என்று (கொடைக்குச் சிறப்பித்துக்) கூறுமாறு, ஆங்கு - அக்காலத்தில் [முற்காலத்தில்] (112) எழு சமம் கடந்த - (தம்மேல்) வருகின்ற போர்களை வென்ற, எழு உறழ் திணி தோள் - கணையத்தோடு மாறுபடுகின்ற திண்ணிய தோளையுடைய, (113) எழுவர்-எழுவரும், பூண்ட- மேற்கொண்ட, ஈகை - கொடையாகிய, செம் நுகம் - செவ்விய பாரத்தை, (114) விரி கடல் வேலி வியல் அகம் விளங்க (115) ஒரு தான் தாங்கிய-பரந்த கடலாகிய வேலியையுடைய விசாலமாகிய இடம் [உலகமெல்லாம்] விளங்கும்படி ஒருவனாகியதானே தாங்கின, உரன் உடை நோன் தாள்-அறிவையுடைய

வலியமுயற்சியையும்.—(116) நறு வீ நாகம் உம் அகில்உம் ஆரம்உம் (117) துறை ஆடும் மகளிர்க்கு தோள் புணை ஆகிய-நறுமணமுள்ள மலர்களையுடைய சுரபுன்னைக் கட்டையும் அகிற்கட்டையும் சந்தனக்கட்டையும் குளிக்குந்துறையிலே ஆடுகின்ற மகளிருடைய தோளுக்குத் தெப்பமாகிய. (118) பொரு புனல் - (கரையைக்) குத்தும் நீரை, தரூஉம் - தருகின்ற [பெற்றுள்ள]தும், போக்கு அரு மரபின் -(பகைவர் எவராலும்) அழித்தற்கு அரிய முறைமையையுடையதும். (119) கருவொடு - கருப்பமிருந்தபோதே [நகரத்தை அமைக்கத் தொடங்கியபோதே], தொல் மா இலங்கை பெயரிய-பழமையாகிய பெருமையினையுடைய இலங்கையென்னும் பேரைப்பெற்றதுமான, (120) நல் மா இலங்கை - நன்றாகிய பெருமையையுடைய இலங்கைக்குரிய, மன்னருள்ளும்-அரசர்கட்குள், (121) மறு இன்றி விளங்கிய-குற்றமின்றி விளங்கியவனை, வடுவில் -[பகைவருடைய முகம்மார்புமுதலிய இடங்களில்] வடுச்செய்தலில், வாய் - வாய்த்த, வாள்-வாளையும் (122) உறு புலி துப்பின்-மிக்கபுலிபோலும் வலியினையுமுடைய, ஓவியர் பெருமகன் - ஓவியர்குடியிலுள்ளவனும், (123) களிறு தழும்பு - யானையைத் தூண்டிச்செலுத்துதலாலுளதான தழும்பு, இருந்த - கிடந்த. கழல் தயங்கு - வீரக்கழல் கிடந்தசைகின்ற. திருந்து அடி-நேரான [பிறக்கிடாத] அடியினையும், (124) பிடி கணம் சிதறும் பெயல் மழை தடக்கை - பிடித்திரளை(ப் பலர்க்கும்)கொடுக்கின்ற பெய்தற்றொழிலையுடைய மழைபோன்ற பெரியகையினையுமுடைய, (125) பல்இயம் கோடியர் புரவலன் - பலவாச்சியங்களையுடைய கூத்தரைப் புரத்தலில் வல்லவனுமான, பெரு இசை (126) நல்லியக்கோடனை - பெரியபுகழையுடைய நல்லியக்கோடனை,—(எ - று.)

ஓவியர்பெருமகன் (122) எழுவள்ளல்கள்பூண்ட ஈகைப்பாரத்தை (113)த் தான் தனித்துத்தாங்கிய நோன்றாளையும் (115) வாளையும் (121). புலித் துப்பினையும் (122) உடையான்: (120) இலங்கைமன்னருள்ளும் (121) மறுவின்றி விளங்கியவன் என்றவாறு. (121) விளங்கிய (122)பெருமகன் என்க. (116) 'நறுவீநாகமும்' என்பதுமுதல் (120) 'நன்மாவிலங்கை' என்பது வரையில், ஓவியரின் இலங்கைசிறப்பைத் தெரிவிப்பது. மாவிலங்கையென்பது, இராமநாதபுரஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த ஊர்களுள் ஒன்றாகவுள்ளதென்பர். கருவொடுபெயரிய-நகரத்தையமைக்கக் கருவிட்டபோதே [அஸ்திவாரம்போட்டபோதே] பெயர்பெற்ற என்றபடி. (இங்கு நல்லியக்கோடனைக் கூறுவது போலவே, குமணனைக் கூறுமிடத்தும் எழுவள்ளல்களுக்குப்பின் அவர்களின் கொடையைக் கொண்டுள்ளானென்று புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது.) இவர்கள் எழுவரும் முதலெழுவள்ளல்கள் இடையெழுவள்ளல்கட்குக் காலத்தாற் பிற்பட்டவராகுதலால், கடையேழுவள்ளல்கள் எனப்படுவர்.

(122) பெருமகன் (125) புரவலன் (126) நல்லியக்கோடனை. என்க. (124) பிடிக்கணம் சிதறும் கை, மழைக்கை என இயையும்.

இனி, (126-143) நல்லியக்கோடனையடைய, அவனால் தமதுவறுமை தீர்ந்துவருகின்றமையைக் கூறுகிறான்:—

126 129. நயந்த கொள்கையொடு
தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை
வான்பொரு நெடுவரை வளனும் பாடி
முன்னாட் சென்றன மாக

(இ - ள்.) (126) நயந்த - (காண்டற்கு) விரும்பிய, கொள்கையொடு - எண்ணத்துடனே, (127) தாங்கு அரு மரபின் - (பிறரால்) பொறுத்தற்கு அரிய (குடிப்பிறந்தோரின்) முறைமைகளையுடைய, தன்உம் - அந்தநல்லியக் கோடனையும், தந்தை (128) வான் பொரு நெடு வரை வளன்உம் - அவன் தந்தையின் வானுலகத்தைத்தீண்டும் நெடிய மலையின் செல்வத்தையும், பாடி—, (129) முன்நாள் சென்றனம் ஆக-சிலநாளைக்குமுன்னே (நாங்கள்) போனேமாக.—(எ - று.)—இந்த 'ஆக' என்ற வினையெச்சம், மேல் (140-இல்) வரும் 'வீட' (142) எய்தி எனத் தொடரும்.

இந்நாள்
திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்தல் நோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி
ஒல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து
இரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையும்
அழிபசி வருத்தம் வீடப் பொழிகவுள்
தறுகண் பூட்கைத் தயங்குமணி மருங்கின்
சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி
யாமவ ணின்றும் வருதும்

(இ - ள்.) 129) இந்நாள் இற்றைநாளில்.—(130) திறவா கண்ண - விழியாத கண்களையுடையனவாகிய, சாய் செவி குருளை - வளைந்தசெவியினையுடைய குட்டி, (131) கறவா பால் முலை கவர்தல் - (பிறரால்) கறக்கப்படாத பாலினையுடையமுலையையுண்ணுதலை, நோனாது (தன்பசி மிகுதியால்) பொறுமல், (132) புனிறு நாய் - ஈன்றணிமையையுடைய நாய், குரைக்கும் - குரைத்தற்கிடனான, புல்லென் அட்டில் - பொலிவழிந்த அடுப்பானது. (133) காழ் சோர் - கூரைக்கழிகள் (கட்டற்று) விழுகின்றதாகிய, முது சுவர் - பழமையான சுவரிலே, கணம் சிதல் அரித்த - கூட்டமாகத் திரண்டெழுந்த கறையான் அரித்ததான, (134) பூழி (நனைந்த) புழுதியிலே, பூத்த-தோன்றிய, புழல் - உட்பொய்யாகிய, காளாம்பி-காளானுடனே (இருக்க),—(135) ஒல்கு பசி உழந்த - தளர்தற்குக் காரணமாகிய பசியாலே வருந்திய, ஒடுங்கு நுண் மருங்குல் - ஒடுங்குகின்ற நுண்ணிய இடையினையும், (136) வளைகை - வளையலையணிந்த கையினையுமுடைய, கிணை மகள்-கிணைவனுடைய மனைவி, வள் உகிர் குறைத்த - கூரிய நகத்தாற் கிள்ளின, (137) குப்பை வேளை - குப்பையிலுள்ள வேளைக்கீரை, உப்பு இலி வெந்ததை - உப்பில்லாமல் (அவ்வடுப்பிலே) வெந்ததனை, (138) மடவோர் காட்சி நாணி கடை அடைத்து - (வறுமையுறுதலும் இயல்பே யென்று அறியாமற் புறங்கூறுகின்ற) மடமைக் குணமுடையோர் காண்பதற்கு வெள்கித் தலைவாசலை மூடி, (139) இரும் பேர் ஒக்கலொடு ஒருங்கு உடன் மிசையும் -(வறுமையினால்) கரிய பெரியசுற்றத்தோடேகூட இருந்து ஒருசேரத்தின்னுகின்ற, (140) அழி பசி - (அறிவுமுதலியன) அழிதற்குக்

காரணமான பசியாலுளதாகிய, வருத்தம்—, வீட - ஒழியும்படி,—பொழி கவுள் - (மதம்) பொழிகின்ற கதுப்பினையும், (141) தறுகண் பூட்கை- கொடுமையையுடைய வலியினையும், தயங்கு மணி மருங்கின் - அசைகின்ற மணியைக்கொண்ட பக்கத்தினையும், (142) சிறுகண் - சிறியகண்ணையு முடைய, யானையொடு - யானையுடனே, பெருந் தேர் எய்தி - பெரிய தேரையும் பெற்று, (143) யாம்—, அவணின்றும் - அவ்விடத்தினின்று, வருதும் வாராநின்றேம்: (எ று.)—(140)வீட(142)எய்தி (143) வருதும் என்க.

ஆற்றுப்படுத்தும் பாணன், நல்லியக்கோடனையடைந்து பரிசில் பெறுதற்கு முன்னர்த் தாம் இருந்த வறுமைநிலையை (130) 'திறவாக்கண்ண' என்பது முதல் (140) 'அழிபசிவருத்தம்' என்பது வரையிலுமுள்ள பகுதிகளால் விளக்கமாகக் கூறுகின்றான். (130-132) அடுப்பில் சமைத்தல் நிகழாமையால் அங்குக் குட்டியீன்ற தாய்நாய் தங்குமென்கிறான்: 'அடுப்பிற் பூனைக்குட்டி யுறங்குகின்றது' என இக்காலத்து வழங்குவது இங்குக் கருதத் தக்கது. தன்குட்டி யுண்பதற்கும பால் கொடாது தாயநாய் குரைப்பது, பசி மிகுதியாலாகும். வீட்டிலிருப்பவர் சமைத்துஉண்பாரானால் நாய்க்கும் உணவு கிடைக்கும்: அஃது இல்லாமையால், நாய் உணவின்றிக் கிடக்கின்றதென்க. 'திறவாகண்ண' என்றமையால், கண திறக்கும் காலமுமாகாத சிறுகுட்டியென்பது பெறப்படும். (133-134) வீட்டுக்கூரை கட்டுஅற்றுக் கழி தொங்கும் பழஞ்சுவரிலுள்ள கறையான அந்த அடுப்பை அரிக்க, புழுதியுள்ள அந்த அடுப்பிற் காளான்பூத்துள்ளது என்கிறார்: (135 140) இப்படிப்பட்ட அடுப்பிலே கிணைமகள் பெரும்பசிவாட்டக் குப்பையில் முளைத்த வேளைக் கீரையைக் கொணர்ந்து உப்பில்லாமலே சமைத்து 'பிறர் தாம் இங்ஙனம் உண்பதைக் கண்டாற் பரிகசிப்பரே' என்று கதவை மூடிக்கொண்டு அவ்வுணவைத் தன்பெருஞ்சுற்றத்துடனே உண்ணும்படி அங்ஙனம் தங்கட்குப் பசி மிக்கிருந்ததென்று, ஆற்றுப்படுத்துவோன், தமது வறுமையின் இயற்கை நிலைமையை எடுத்துக் கூறுகின்றான். கிணைமகள் - கிணைப்பறை கொட்டுவோனுடைய மனைவி: இது, ஆற்றுப்படுத்தும் பாணன் தன் மனைவியைக் கூறியது. 'உப்பிலிவெந்ததை' என்றது - உப்பு வாங்குவதற்கும் முடியாத வறுமைநிலையைப் புலப்படுத்தும். வருதும்-தன்மைப்பன்மை, நிகழ்காலங் காட்டிற்று.

இனி, இங்ஙனம் தான் நல்லியக்கோடனால் வறுமையொழிந்து பெரும் பரிசில் பெற்றுவந்ததைக் கூறியவன், பரிசில் கொடுப்பாரைத் தேடித்திரியும் பாணனை நோக்கி, நீங்களும் அவனை நோக்கிச்செல்வீராயின் வழியிலுள்ளாரும் நுமக்கு உணவுமுதலியன கொடுத்து உதவுவார்: பிறகு அவன் ஊர் சமீபத்திலிருக்கும்: ஆதலால், ஆங்குசசென்று அவனைக் குறுகிச் சிலசொல்லுமளவிற்குள் அவன் உணவுமுதலியனதந்து மிகுபரிசிலும் ஈந்து நும்மை விடுப்பா னென்று கூறிமுடிக்கின்றான். அங்ஙன கூறுபவன், நல்லியக்கோடனை நோக்கிசசென்றால் செல்லும்வழியிலுள்ள இடங்களிலுள்ளவரால் உபசரிக்கப்படுவதைக் கூறத்தொடங்கி, வெய்தனிலத்துள்ள எயிற்பட்டினத்துப்பெறுவதை 144-முதல் 163 வரையிலுமுள்ள அடிகளாற்கூறுகின்றான்:—

143-145. நீயிரும்
இவணயந் திருந்த விரும்பே ரொக்கல்
செம்ம லுள்ளமொடு செல்குவி ராயின்

(இ - ள்.) (143) நீயிரும் - நீங்களும், (144) நயந்து இவண் இருந்த -

விரும்பி இவ்விடத்திருந்த, இரும் பேர் ஒக்கல் - (வறுமையாற்) கரியபெரிய சுற்றத்தின், (145) செம்மல் உள்ளமொடு-தலைமைபெற்ற நெஞ்சத்துடனே, செல்குவிர் ஆயின் -(பின்னும்கொடுப்பவரைத்தேடிச) செல்பவராயிருந்தால், (எ-று.)—நயந்தனிர்செலின் (269) என்பதை இங்குக் கொணர்ந்துகூட்டுக.

*அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவும்*
*தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்*
*கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்*
*நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்*
*கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்*
*பாடல் சான்ற நெய்த னெடுவழி*
*மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய*
*பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரின்*
*ஓங்குநிலை யொட்டகந் துயின்மடிந் தன்ன*
*வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்*
*கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோள்*
*மதியேக் கறூஉ மாசறு திருமுகத்து*
*நுதிவே னோக்கி னுளைமக ளரித்த*
*பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்*
*கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்*
*தளையவிழ் தெரியற் றகையோற் பாடி*
*அறற்குழற் பாணி தூங்கி யவரொடு*
**வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்:**

(இ - ள்.) (146) அலை நீர் தாழை அன்னம் பூப்பவும் - கடலினலை யெறிகின்ற நீர் பாய்தலைப்பெற்ற தாழை அன்னம்போலப் பூக்கவும்,—(147) தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும் - இளவேனிற்காலந் தொடங்குகின்ற நாளிலே செருந்திப்பூ (தன்னைக் கண்டாரை)ப் பொன்னென்று மருளப்பண்ணவும்,—(148) கடுஞ் சூல் முண்டகம் கதிர் மணி கழாஅலவும்-முதிர்ந்தசூலையுடைய கழிமுள்ளி ஒளியையுடைய நீலமணிபோலப் பூக்கவும்,-(149) நெடுங் கால் புன்னை நித்திலம் வைப்பவும்-நெடியதாளையுடையபுன்னை முத்துப்போல அரும்புகொள்ளவும், (150) கானல் - கடற்கரையில், வெண் மணல் - வெள்ளியமணலிலே, கடல் உலாய் நிமிர்தர - கடலின் நீர் பரந்து நிமிராநிற்கவும்,—(151) பாடல் சான்ற - புகழ்தல் அமைந்த, நெய்தல்-நெய்தல் நிலத்தின், நெடுவழி-நெடியவழியிலுள்ளதும்,—(152) மணி நீர் வைப்பு-நீலமணிபோலும் கழியின்நீர்சூழ்ந்த ஊர்களையுடையதும், (153) பனி நீர் படுவின் - குளிர்ச்சியையுடையக் கரைகொண்ட குளங்களையுடையதுமான, (152) மதிலொடு பெயரிய (153) பட்டினம் - மதிலோடே பெயர்பெற்ற எயிற்பட்டினத்தே, படரின் - செலவீராயின்,—(154) ஓங்கு நிலை ஒட்டகம் துயில் மடிந்தன்ன - உயர்ந்த தன்மையையுடைய ஒட்டகம் உறக்கத்தே கிடந்தாற்போல, 155) வீங்கு திரை மிகுகின்ற திரை, கொணர்ந்த-கொண்டுவந்த, விரை மரம் விறகின்-மணத்தையுடைய அகிலாகிய விறகாலே, (156) கரும்புகை செந்தீ மாட்டி-கரியபுகையையுடைய சிவந்தநெருப்பை யெரித்து, பெருந் தோள் (157) மதி ஏக்கறூஉம் மாசு அறு திரு முகத்து (158) நுதி வேல் நோக்கின் நுளைமகள்-பெரிய தோளினையும் சந்திரன் (நாம் இத்தன்மை

பெற்றிலேமே! என்று) ஏக்கங்கொள்ளுதற்குக் காரணமான குற்றமற்ற அழகிய முகத்தையும் முனையினையுடைய வேல்போலும் பார்வையினையுமுடைய நுளைச்சாதியிற்பிறந்த மகளாலே, அரித்த - அரிக்கப்பட்ட, (159) பழம் படு தேறல் - பழையதாகிய களிப்புமிகுகின்ற கள்தெளிவை, பரதவர்- பரவர், மடுப்ப-வாயினிடத்தே வைக்க,—(160) இளை மலர் படப்பை இடங்கில் கோமான் (161) தளை அவிழ் தெரியல் தகையோன் பாடி-கொத்தாக வெழுந்த மலர்களையுடைய தோட்டங்களைக்கொண்ட இடங்கிலென்னும் நகரக்கு அரசனாகிய அரும்புநெகிழ்ந்த மாலையினையுடைய அழகையுடையோனைப் பாடி, (162) அறல் குழல் பாணி தூங்கியவரொடு - தாளவறுதியையுடைய குழலோசையின் தாளத்திற்குஏற்ப ஆடின மகளிரோடே. (163) வறல் குழல் சூட்டின் - உலர்த்தலையுடைய குழல்மீனைச சுட்டதனோடே, வயின் வயின் பெறுகுவிர் - மனைதோறும் மனைதோறும் பெறுவீர்: (எ - று.)

எயிற்பட்டினம்படரின் (153), இடங்கிற்கோமானாகிய (160) தகையோனைப்பாடி (161) ஆடினமகளிரோடே (162) (நீங்களும்) சூட்டோடே (163) தேறலைப்பரதவா மடுப்ப (159) (அவற்றை) வயின் வயிற் பெறுகுவீர் (163) என்க. 146-முதல் 151-வரையில் நெய்தல்நிலத்துவருணனை. நல்லியக்கோடனைநோக்கிசசெல்லும்நீங்கள் இடைவழியிலுள்ளநெய்தனிலத்து எயிற்பட்டினத்தைசசேரின் நுளைமகள் திரூட்டிக்காய்ச்சியரித்த தேறலோடு குழல்மீன்சூட்டைத் தரப் பாணி தூங்கியவரோடு பெறுகுவிரென்கின்றான். பாணிதூங்கியவர் - பாணனுடன் செல்வோர். (154-155) ஒட்டகந்துயில் மடிந்தன்ன திரை எனக: துயின்மடிந்தன்ன விறகுமாம. நல்லியக் கோடனுடைய தலைநகராகிய இடங்கில் என்பது இடங்கிலென்ற பெயருடன் திண்டிவனத்துக்குச் சமீபத்திலுள்ள தென்பர்.

எயிற்பட்டினத்தைக் கடந்தபிறகு முல்லையிலுள்ள வேலூரிற் சென்றாற் பெறுவதை (164-177 அடிகளாற்) கூறுகின்றான்:—

பைங்கனை யவரை பழவங் கோப்பவும்
கருநனைக் காயாக் கணமயி லவிழவும்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்
கொல்லை நெடுவழிக் கோப மூரவும்
முல்லை சான்ற முல்லையம் புறவின்
விடர்கா லருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கான் மாறிய செவ்வி நோக்கித்
திறல்வே லுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூ ரெய்தின்
உறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
எயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை யாயமொடு
ஆமான் சூட்டி னமைவரப் பெறுகுவிர்:

(இ - ள்.) (164) பை நனை அவரை பவழம் கோப்பவும்-பசத்த அரும்புகளையுடைய அவரை பவழம்போல மலர்களைத்தொடுக்கவும், (165) கரு நனை காயா கணம மயில் அவிழவும் - கரிய அரும்பினையுடைய காயாக்கள் திரண்ட மயிலின் கழுத்துப்போலப் பூக்கவும், (166) கொழு கொடி முசுண்டை

கொட்டம் கொள்ளஉம் - கொழுவிய கொடியினையுடைய முசுண்டை கொட்டம்போலும் பூவைக் கொள்ளவும், (167) செழுங்குலை காந்தள் கைவிரல் பூப்பஉம்-வளவியகுலையினையுடைய காந்தள் கைவிரல்போலப் பூவாநிற்கவும், (168) கொல்லை நெடுவழி கோபம் ஊரஉம் - கொல்லையிடத்து நெடியவழி களிலே இந்திரகோபம் ஊராநிற்கவும், (இங்ஙன் அவரை முதலியன கார் காலம வந்திட்டமையைத் தெரிவிக்கவும கணவன்சொற்பிழையாது தலைவி இல்லிருந்து நல்லறஞ்செய்து). (169) முல்லை சான்ற-ஆற்றியிருந்த தன்மை யமைந்த, முல்லை அம் புறவின் - முல்லைக்கொடிபடர்ந்த காட்டினிடத்து, (170) விடர் கால் அருவி வியல் மலை (171) சுடர் (170) மூழ்கி (171) கான் மாறிய செவ்வி நோக்கி - முழைஞ்சுகளிலே குதிக்கும் அருவியினையுடைய பெரிய(அத்த)கிரியிலே சூரியன் மறைந்து(அவன்)கிரணங்களெல்லாம்மாறிய அந்திக்காலத்தைப் பார்த்து, (172) திறல் வேல் நுதியின் பூத்த கேணி (173) விறல் வேல் வென்றி *வேலூர் எய்தின் - வலியினையுடைய(முருகக் கடவுளின்) வேலின்முனைபோல மலர்களைப்பூத்த கேணியினையுடைய வெற்றியையுடைய வேலாலே வென்றியையடைந்த வேலூரைச் சேர்ந்தால், (174) உறுவெயிற்கு உலைஅய உருப்புஅவிர் குரம்பை மிகுகின்ற வெயிலுக்கு (உள்ளுறைகின்றோர்) வருந்துகின்ற வெப்பம் விளங்குகின்ற குடிசையிலிருக் கின்ற, (175) எயிற்றியர் அட்ட இன் புளி வெஞ் சோறு-எயினக்குலத்து மகளிராலே சிமைக்கப்பட்ட இனியபுளிங்கறியிட்ட வெவ்வியசோற்றை, (176) தேமா மேனி சில வளை ஆயமொடு - தேமாவின் தளிர்போலும் மேனியையும் சிலவாகிய வளையினையுமுடைய (நும்) மகளிருடைய திரளு டனே, (177) ஆமான் சூட்டின-ஆமானின்சூட்டிறைச்சியையும், அமைவர - பசிகெட, பெறுகுவிர்—; (எ - று.)

சுடர்கால்மாறிய செவ்விநோக்கி (171)முல்லையம்புறவின் (169) வேலூ ரெய்தின் (173), சோற்றை (175)ச் சூட்டிறைச்சியுடனே (177) ஆயமொடு (176) பெறுகுவிர் (177) என்க. வேலூர (173) முல்லையம்புறவின் (169) உள்ளதெனக. 164-முதல் 168-வரையிற்கூறிய அவரைபவழங்கோத்தல் முதலியன, கார்காலதது நிகழ்வன. தன்கணவன் கார்காலத்து மீண்டுவருவ தாகக்கூறி வினைவயிற்சென்றவன அங்ஙனம் மீண்டுவராவிடத்தும் விரை வில் வருவனென்ற கருத்தோடு தலைவி யாற்றியிருததற்கு இடனுவது முல்லை யெனக் கூறுவது பொருளிலக்கண மரபு ஆதலால், 'பைங்கொடியவரை பவழங் கோப்பவும்...கோபமூரவும் முல்லைசான்ற' என்றார். கொட்டம்-பனங்குருத் தாற் செய்த ஒருவகைப்பெட்டி: 'கொட்டை' பாடமாயின், நூற்கொட்டை. இன்புளி - தித்திப்புமாம். தேமா - தளிர்க்குச சினையாகுபெயர். பல்வளை யிடுவது பெதும்பைப பருவத்துக்கு உரியதாதலால், (176) சில்வளையாயம் என்றது - ஆடல்முதலிய துறைக்கு உரிய பருவத்தின ரென்ற கருத்தைக் காட்டு மெனபர்.

172, 173-அடிகள் வேலூரின் சிறப்பைத் தெரிவிப்பன. ஒருகால் நல்லியக்கோடனுக்குப் பகை மிக்கதாக, இவன் அப்பகை மிக்கமைக்கு அஞ்சி முருகக்கடவுளை வழிபட, அக்கடவுள் இவனது வழிபாட்டிற்கு மனமு வந்து இவனதுகனவில தோன்றி, ஒருகேணியைச சுட்டிக்காட்டி, 'இக்கேணி யிற்பூத்த மலர்களைக்கொண்டு நும்பகைவர்மீது எறி: இவற்றாற் பகையொழி யும்' என்று கூறி அக்கேணியின மலர்களையெல்லாம் தான் வேலாக நிருமித்து

* வேலூர் - உப்பு வேலூரென்பர்.

வைக்க, இந்த நல்லியக்கோடனும் அக்கேணியின் மலர்களைப் பறித்துப் பகைவர்மீது எறிய, அம்மலர்களெல்லாம் முருகக்கடவுளின் வேலாகிப் பகைவரையழிக்க, நல்லியக்கோடன் பகைவென்று கவலையற்றனனென்பது இந்த கதைகளிற் குறித்த கதை. இங்ஙனம் கேணிமலர்களை முருகக்கடவுள் வேலாக நிருமித்ததுபற்றியே இவ்வூர்க்கு வேலூரென்று பெயராயிற்றென்பர்.

இனி மருதத்துள்ள ஆமூரெய்தின் பெறுவனவற்றை, 178 195 அடிகளாற் கூறுகின்றான்:—

நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி
நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவல்
மதிசே ரரவின் மானத் தோன்றும்
மருதஞ் சான்ற மருதத் தண்பணை
அந்தண ரருகா வருங்கடி வியனகர்
அந்தண் கிடங்கி னவனாமூ ரெய்தின்
வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தின்
உரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கையன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப
இருங்கா ழுலக்கை யிரும்புமுகந் தேய்த்த
அவைப்புமா ணரிசி யமலை வெண்சோறு
கவைத்தா ளலவன் கலவையொடு பெறுகுவிர்.

(இ - ள்.) (178) நாள் காலையிலே. நறும் பூங் கோதை தொடுத்த - நறிய மலர்களை மாலைகட்டினாற்போல ஒழுங்காகக்கொண்டுள்ள, சினை - கிளைகளையும், (179) குறுங் கால் - குறிய அடியினையுமுடைய, காஞ்சி - காஞ்சிமரத்தின், கொம்பர் - பெருங்கொம்புகளிலே, ஏறி— (180) நிலை அரு குட்டம் நோக்கி நெடிது இருந்து - (எக்காலத்தும்) நிலைப்படுதல் அரிதாகிய (நீர்நிலையின்) ஆழத்தை(த் திரிகின்ற மீன்களை யெடுத்தற்கு ஏற்றகாலங் (குறித்துப்)பார்த்த வண்ணம் நெடும்பொழுது இருந்து; (181) புலவு கயல் எடுத்த - புலாலுநாற்றத்தையுடைய கயலை (முழுக்கினாற்) கவர்ந்தெடுத்த, பொன் வாய் - பொன்னிறமான வாயையுடைய, மணி சிரல் - நீலமணிபோன்ற சிச்சிலிப் பறவையின், (182) வள் உகிர் கிழித்த - கூரியநகம் கிழித்த, வடு தழும்பு, ஆழ் அழுந்தின, பசு அடை - பசிய இலையையுடைய, (183) முள் அரை - முள்ளையுடைத்தாகிய தண்டினையுடைய, தாமரை - வெண்டாமரையின், முகிழ் விரி நாள் போது - அரும்புவிரிந்த காலைவேளையிற்பூவின், (184) கொங்கு - தேனை, கவர் - உண்கின்ற, நீலம் செங் கண் சேவல் - நீலநிறத்தினையும் செந்நிறக்கண்களையுமுடைய வண்டின் ஒழுங்கு, (185) மதி சேர் அரவின் மான தோன்றும் - சந்திரனைச்சேர்கின்ற கரும்பாம்பையொப்பத் தோன்றுகின்ற, (186) மருதம் சான்ற - ஊடலொழுக்கம்மிகுந்த [ஊடியுங்கூடியும்போகம் நுகர்கின்ற], மருதம் - மருத நிலத்து, தண் பணை - குளிர்ந்த வயலிடத்தை

யும். (188) அம் தண் கிடக்கின் - அழகினையுடைய குளிர்ந்த அகழினையும். (187) அருங் கடி - அரிய காவலினையும், வியன் - அகற்சியையுமுடைய, அந்தணர் அருகா நகர் - பிராமணர்சுருக்காத நகராகிய, (188) அவன் ஆமூர் - அந்நல்லியக்கோடனுடைய ஆமூரை, எய்தின் - அடைந்தால்.—(189) வலி புணர் எருத்தின் - (இழுத்தற்குஉரிய) வலிமைபொருந்தின கழுத்தோடு, வலம் பட நடக்கும் - வெற்றியுண்டாகுமாறு நடப்பதான, (190) கோண் பகடு - உடல்வலிமையையுடைய எருதினையுடைய, உரன் கெழும் உழவர் - அறிவு பொருந்தின உழவருடைய, தங்கை - தங்கையாகிய, (191) பிடி கை அன்ன பின்னு வீழ் சிறு புறத்து (192) தொடி கை மகடூஉ - பெண்யானையினது கைபோன்ற பின்னலை மயிர் வீழ்ந்துகிடக்கின்ற சிறியமுதுகினையும் தொடியணிந்தகையினையுமுடைய மகள், (தான்உள்ளேயிருந்துகொண்டு). மக - (தன்) பிள்ளைகளைக்கொண்டு. முறை - முறைமையாக, தடுப்ப - (நும்மெல்லாரையும்) போகாது தடுக்கையினாலே.—(193) இரு காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த (194) அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு - கரிய வயிரத்தையுடையஉலக்கையினது பூணினைக்கொண்ட முகத்தைத் தேயப்பண்ணின குற்றுதல்மாட்சிமைப்பட்ட அரிசியிலாக்கிய கட்டியாகிய வெள்ளியசோற்றை, (195) கவை தாள் அலவன் கலவையொடு - பிளவுபட்ட தாளையுடையஞெண்டு (பீர்க்கங்காயுடன்கலந்த) கலவையோடே, பெறுகுவிர்-.

பணையையும் (186) கிடங்கினையும் (188) கடியையுமுடைய அந்தணர் அருகாநகராகிய (187) ஆமூரெய்தின் (188) உழவர்தங்கை (190) மகடூஉ தடுப்ப (192), சோறு (194) கலவையொடுபெறுகுவிர் (195) என்க.

178-முதல் 186-வரையில், ஆமூர் மருதத்தைச் சேர்ந்ததென்கிறான். முதலொன்பது அடிகள் மருதநிலத்து வருணனை. வெண்டாமரைப் பூவில் தேனையுண்ண வண்டுகள் மொய்ப்பது - சந்திரனைச்சேர்கின்ற கரும்பாம்பு போலத் தோன்றுதற்கு இடனான மருதஞ்சான்ற மருதமென்றவாறு. சிச்சிலிப்பறவை காஞ்சிமரத்திற் காத்திருந்து சமயம்பார்த்து மீனைக் குத்தியெடுத்துச்செல்லும்போது அதன் உகிர்வடு பதிந்த பசிய இலையையுடையது வேண்டாமரைக்கொடி என்க. மகடூஉமகமுறை தடுப்ப என்பதற்கு - உழவர்மகள் பிள்ளைகளை உபசரிக்குமாபோலே உபசரித்துப்போகவொட்டாது விலக்க என்றுமாம். மயிலொழிந்த பறவைகளின் ஆணைக் காட்டும் 'சேவல்' இங்கு, ஒழுங்காகப்படியும் வண்டுகளைக் காட்டிற்று.

இங்ஙனம் ஆமூரையடைந்திட்டால் அதன்பிறகு அந்த ஓய்மானாட்டு நல்லியக்கோடனூர் சேய்த்தன்று, அணித்தேயிருக்குமென்கிறான் :—

எரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்
நிணனுண்டு சிரித்த தோற்றம் போலப்
பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தாள்
அண்ணல் யானை யருவிதுக ளவிப்ப
நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்
சேய்த்து மன்று சிறிது நணியதுவே :

(இ - ள்.) (196) எரி - (மேல்நோக்கியெரியுந்தன்மையுள்ள) நெருப்பு, மறிந்து அன்ன - சாய்ந்தாலொத்த, நாவின் - நாக்கினையும், (197) கரு மறி காதின் - வெள்ளாட்டுக் குட்டியைபணிந்த காதுகளையும், கவை அடி - பிளவு

பட்ட கால்களையுமுடைய, பேய்மகள் - பேய்மகளின், (198) நிணன் உண்டு சிரித்த - நிணத்தைத்தின்று சிரித்த, (196) இலங்கு எயிறு-விளங்குகின்ற பற்களின், (198) தோற்றம் போல - காட்சிபோல, (199) பிணன் உகைத்து சிவந்த பேர் உகிர் - (தாம் கொன்ற) பிணங்களின் தலைகளைக் காலாலே தள்ளிச் சிவந்த பெரிய உகிரினையும் பணை தாள் - பெருமையையுடைய கால்களையுமுடைய, (200) அண்ணல் யானை - தலைமையையுடையவாகிய யானைகளின், அருவி - மதவருவி, துகள் -(எழுந்த) துகளை, அவிப்ப-அடக்குவதனால், (201) நீறு அடங்கு - புழுதியடங்கின, தெருவின் - தெருவினையுடையதும், அவன் சாறு அயர் - அந்நல்லியக்கோடனது விழா நடக்கின்றதுமான, முது ஊர் - பழமையான ஊரானது, (202) சேய்த்தும் அன்று - தூரிய இடத்திலுள்ளதும் அன்று: சிறிது நணியதுவே-சிறிதாகச் சமீபித்த இடத்தில்தானே யுள்ளது; (எ - று.)

பிணனுகைத்துச் சிவந்த யானையின் பேருகிர், நிணனுண்டுசிரித்த பேய்மகளின் இலங்கெயிறு போலும்: அங்ஙனமுள்ள யானையின் மதநீரால் தெருவின்புழுதி யடங்கு மென்றதனால். அவனுடைய யானையின் மிகுதி பெறப்படும். (269) 'நல்லியக்கோடனைநயந்தனிர்செலினே' என்பதை 'நணியதுவே' என்பதன்பின் கூட்டுதலும் ஒன்று.

இனி இந்நூல் முடியுமளவுள்ள பகுதிகளினால், இங்ஙன் நல்லியக்கோடன் நகர் அணித்தாகையால் அந்த நல்லியக்கோடனைக்குறித்துச் செல்வதாயிருந்தால், அவனுடையநகரின்வாயிலைச் சேர்ந்து, பின்னர் அறிஞர் முதலியோரேத்த இருக்கும் அந்த நல்லியக்கோடனைக் குறுகி எத்துமளவிற்குள், அவன் உணவு முதலியன கொடுத்துப் பரிசிலையும் ஈந்து விடுப்பானென்கிறான்: நல்லியக்கோடனைக் குறித்துச் செல்லும்போது, முதலில் அவன் நகர்வாயிலைக் குறுகவேணுமென்கின்றான்:—

பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்
அருமறை நாவி னந்தணர்க் காயினும்
205. கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன
அடையா வாயி லவனருங் கடைகுறுகி,

(இ - ள்.) (ஆதலால்), (203) பொருநர்க்கு ஆயினும் - கிணைப்பொருநர்க்காயினும், புலவர்க்கு ஆயினும் - அறிவுடையோர்கட்காயினும், (204) அரு மறை நாவின் அந்தணர்க்கு ஆயினும் அரியவேதத்தையுடைத்தாகிய நாவினையுடைய அந்தணர்க்காயினும், (206) அடையா - அடைக்கப்படாத, (205) கடவுள் மால் வரை கண்விடுத்து அன்ன - தெய்வங்களிருக்கின்ற பெருமையையுடைய மேரு ஒருகண்ணை விழித்துப்பார்த்தாலொத்த, (206) அரு - (பொருநர்முதலியோர்க்கன்றி ஏனையோர்க்குப் புகுதற்கு) அரிய, அவன் கடைவாயில் - அந்த நல்லியக்கோடனது தலைவாயிலை, குறுகி - அணுகி;—(எ - று)

'பொருநர் முதலியோர்க்கு அடையாவாயில்' எனவே, பரிசில் பெறுதற்கு இவர்கள் வரவேணுமென்று திறந்துவைக்கப்பெற்ற இவ்வாயில் ஏனையோர்க்கு உள்ளே சேறற்கு அரிய தென்க.

இனிப் பலரும் அந்த நல்லியக்கோடனை ஏத்தும்ஆறு கூறத்தொடங்கி, அறிஞர் இன்ன இன்ன குணங்களையேத்துவரென்கிறான்:—

207-209. செய்ந்நன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையும்

இன்முக முடைமையு மினிய னாதலும்
செறிந்து விளங்கு சிறப்பி னறிந்தோரேத்த

(இ - ள்.) (207) செய் நன்றி அறிதலும் - (பிறர் தனக்குச்) செய்த நன்றியையறிந்து (அவர்க்குத் தானும்)நன்மை செய்தலையும். சிறு இனம் இன்மையும் - அறிவும் ஒழுக்கமுமில்லாத மாக்களின்திரள் (தனக்கு) இல்லாமையும், (208) இன்முகம் உடைமையும் - (காண்போர்க்கு) இனிய முகத்தை (எக்காலத்தும்) உடையவனாதலையும், இனியன் ஆதலும் - (முகத்தில் இனிமையாகச் சிரித்து மனத்து இன்னாதவனாகாமல் மனம் முகத்திற்கு ஏற்ப) இனியவனாதலையும், (209) செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த - (எக்காலமும் தன்னுடனே) நெருங்கிவிளங்குகின்ற தலைமையினையுடைய (பலகலையும்) உணர்ந்தோர் புகழவும்,—(எ - று.)

'சிறிய வினமாவது - நல்லதன் நலனும் தீயதன்தீமையும் இல்லென்போரும் விடருந் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு: இது, அறிவைத் திரித்து இருமையுங்கெடுக்கும் இயல்பிற்று' என்பர், பரிமேலழகர். இனியனாதலும் என்ற விடத்து "முகத்தினினியநகாஅ அகத்தின்னா, வஞ்சரை யஞ்சப்படும்" என்ற திருக்குறள் அறியத்தக்கது. அறிஞர் முதலியோரேத்து கின்ற குணங்கள் அவ்வவர்க்கு ஏற்றவாறு இருத்தல் கவனித்தற்கு உரியது.

வயவரேத்துகின்ற குணங்கள் இன்ன இன்ன என்கிறான்:—

அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையும்
ஆணணி புகுதலு மழிபடை தாங்கலும்
வாண்மீக் கூற்றத்து வயவரேத்த,

(இ - ள்.) (210) அஞ்சினர்க்கு அளித்தலும் - (தன் வீரத்தைக்கண்டு) அஞ்சிவந்து அடிவீழ்ந்தார்க்கு அருள் செய்தலையும், வெம் சினம் இன்மையும் - கொடிய கோபமில்லாமையும், (211) ஆண் அணி புகுதலும் - வீரர் நின்ற அணியிலேசென்று (அந்த அணியைக்) குலைத்தலையும், அழி படை தாங்கலும் - (தனது படை கெட்டதாயின்) கெட்ட அந்தப் படையிடத்தே சென்று (பகைவரை ஒங்கவொட்டாது) தாங்குதலையும், (212) வாள் மீக் கூற்றத்து வயவர் ஏத்த - வாள்வலியாலே மேலாகிய சொல்லைப் பெற்ற வீரர் புகழவும்,—(எ - று.)

ஆணென்றசொல் ஆண்பாலையெல்லாம் உணர்த்து மெனினும், அணி புகுதலென வந்தமையால் வீரரை யுணர்த்திற்று. கோபம் நீட்டித்து நிற்பது சினமெனப்படு மென்பர்.

அரிவையரேத்துகின்ற குணங்கள் இன்னவின்ன வென்கிறான்:—

கருதியது முடித்தலுங் காமுறப் படுதலும்
ஒருவழிப் படாமையு மோடிய துணர்தலும்
அரியே ருண்க ணரிவைய ரேத்த,

(இ - ள்.) (213) கருதியது முடித்தலும் - (தன் நெஞ்சு) கருதிய புணர்ச்சியைக் குறைகிடவாமல் முடிக்கவல்ல தன்மையையும். காமுறப் படுதலும் - (அங்ஙனந் தானே இன்பமுறுதே அம்மகளிரும் தம்மாலே மிக்க இன்பத்தைப் பெறும் தன்மை) விரும்பப்பட்டிருத்தலையும், (214) ஒருவழிப் படாமையும் - (அவர்கள் அங்ஙனம் விரும்பினார்களென்று அவர்களின்) வசத்தனாகாமையும், ஓடியது உணர்தலும் - தான் அவர்கள் வசத்தனா

விடினும் அம்மகளிர்) வருந்திய தன்மையையுணர்ந்து (அவரைப்) பாதுகாத்தலையும், (215) அரி ஏர் உண் கண் அரிவையர் ஏத்த-செவ்வரி பொருந்தின மையுண்ட கண்களையுடைய மகளிர் புகழவும்,—(எ - று.)

நுகர்தற்கு உரிய மகளிரை நுகர்ந்து பற்றுநீங்காவிடின் பிறப்பு நீங்காதாதலால், கருதியதுமுடித்தல் வேண்டப்படுவதாயிற்று. ஓடியதுணர்தலென்பதற்கு - மகளிர் நெஞ்சில் நிகழ்ந்ததையுணர்ந்து அவர் குறை முடித்தலெனினுமாம்.

பரிசிலர்ஏத்துகின்ற குணங்கள் இன்ன வின்ன வென்கிறான்:—

216-218, அறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த

(இ - ள்.) (216) அறிவு மடம் படுதலும்-(தான் கூறுகின்றவற்றை அறியும் அறிவு இல்லாதாரிடத்துத் தான்) அறியாமைப்பட்டிருத்தலையும், அறிவு நன்கு உடைமையும் -(தன்னைப்போல அறிவுடையாரிடத்துத் தான்)நன்றாக அறிவுடையனாயிருத்தலையும், (217) வரிசை அறிதலும் - (பரிசிலருடைய) தரத்தினை அறிந்து கொடுத்தலையும், வரையாது கொடுத்தலும் - (கல்வியறிவில்லாத பரிசிலர்க்குக்) கொடாதிருத்தலைமேறகொள்ளாமல் (அவர்கள் அளவிற்குத்தக்கனவற்றைக்) கொடுத்தலும், (218) பரிசில்வாழ்க்கைப்பரிசிலர் ஏத்த - பிறரிடத்துப்பெற்றபொருளால் இல்வாழ்க்கை நடத்துதலையுடைய பாணர் கூத்தர்முதலாயினோர் புகழவும்,—(எ - று.)

'அறிவுமடம்படுதலுமறிவுநன்குடைமையும்' என்ற இடத்து "ஒளியார்முன்னொள்ளியராதல் வெளியார்முன், வான்சுதைவண்ணங்கொளல்" என்ற குறளின்பொருள அறிதற்கு உரியது. 'வரையாதுகொடுத்தல்' என்பதற்கு - தனக்கென்று ஒன்றைவைத்துக்கொள்ளாமற் கொடுத்தலென்றுமாம்.

பன்மீன் நடுவட் பான்மதி போல
இன்னகை யாயமொடு இருந்தோற் குறுகி,

(இ - ள்.) (219) பல் மீன் நடுவண் பால் மதி போல - பலமீன்களுக்கு நடுவிருந்த பால்போலும் ஒளியையுடைய(கலைநிறைந்த) சந்திரன்போல,(220) இன் நகை ஆயமொடு இருந்தோன் - (இயல் இசை நாடகங்களாலும் இனிய மொழிகளாலும்) இனிய மகிழ்ச்சியைச் செய்யுந் திரளோடேயிருந்தவனை, குறுகி—,—(எ - று.)

இனி, பரிசிலுக்குச்செல்லும் பாணன் பாடிப் புகழுமாற்றை 221-235 அடிகளாற் கூறுகின்றான்:—

பைங்க ணூகம் பாம்பு பிடித்தன்ன
அங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர் பொழுகிய வகையமை யகளத்துக்
கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்து
அமிழ்துபொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பின்
பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
கூடுகொ ளின்னியங் குரல் குரலாக

நூனெறி மரபிற் பண்ணி யானுது
முதுவோர்க்கு முகிழ்த்த கையினை யெனவும்
இளையோர்க்கு மலர்ந்த மார்பினை யெனவும்
ஏரோர்க்கு நிழன்ற கோலினை யெனவும்
தேரோர்க் கழன்ற வேலினை யெனவும்
நீ சில மொழியா வளவை,

(இ - ள்.) (221) பைங்கண் ஊகம் பாம்பு பிடித்து அன்ன - பசிய கண்களையுடைய கருங்குரங்கு பாம்பின்தலையைப்பிடித்த காலத்து (அப்பாம்பு ஒருபாலிறுகவும் ஒருபால்நெகிழவும் அதன்கையைச் சுற்றுமாறு) போன்ற, (222) அம் கோடு செறிந்த அவிழ்ந்து வீங்கு திவ்வின் - அழகியதண்டின்இடத்தே நெருங்கச்சுற்றி நெகிழவேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுகவேண்டுமிடத்து இறுகியும் நரம்பு துவக்கும் வார்க்கட்டினையும், (223) (இரண்டு விளிம்புஞ்சேரத்தைத்த ஆணிகளாலே), மணி நிரைத்து அன்ன வனப்பின் - மணியை வரிசைப்படுத்திவைத்தாற்போன்ற அழகினையும், வாய் அமைத்து - பொருந்தப்பண்ணி, (224) வயிறு சேர்பு ஒழுகிய வகை அமை அகளத்து - வயிறு சேர்ந்து ஒழுங்குபட்ட தொழில்வகையமைந்த பத்தரினையும்,—(225) கானம் குமிழின் கனி நிறம் கடுப்ப (226) புகழ்வினை பொலிந்த பச்சையொடு - காட்டிடத்துக் குமிழியினுடைய பழத்தின்நிறத்தை யொப்பப் புகழப்படும் (தவருட்டின) கைத்தொழிலாற் பொலிவுபெற்ற போர்வையோடே, தேம் பெய்து (227) அமிழ்துபொதிந்து இலிற்றும் புரி அடங்கு நரம்பின் - தேனொழுகுகின்ற தன்மையைத் (தன்னிடத்தே) பெய்துகொண்டு அமிழ்தத்தைத் (தன்னிடத்தே) பொதிந்து துளிக்கின்ற முறுக்கு அடங்கின நரம்பையுமுடைய, (228) பாடுதுறை முற்றிய (நீ) பாடுந் துறைகளிலெல்லாம் முற்றப் பாடுதற்கு, பயன் தெரி கேள்வி-(தனது) பயன விளங்குகின்ற இசைகளை, (229) கூடுகொள் - (தான்) கூடுதல்கொண்ட, இன் இயம் - இனியயாழை, (230) நூல் நெறி மரபின் - இசைநூல் கூறுகின்ற முறையாலே, (229) குரல் குரல்ஆக - செம்பாலையாக, (230) பண்ணி-வாசித்து,— ஆனுது (231) முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும்-(ஒருகால் குவித்தலோடு) அமையாமல் (பலகாலும அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன் என்னும்) பெரியோர்கட்குக்குவித்த கைகளையுடையையெனவும்,—(232) இளையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும்-வீரரெறிதற்கு மகிழ்ந்து கொடுத்த மார்பை யுடையை யெனவும், (233) ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும்-ஏரினையுடைய குடிமக்கட்கு நிழல்செய்த செங்கோலையுடையையெனவும்,— (234) தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும்-தேரினையுடைய அரசர்க்கு வெம்மைசெய்த வேலையுடையாயெனவும், (235) நீ சில மொழியா அளவை-நீ சில புகழ்மொழிகளைக் கூறுதற்குமுன்பு,—(எ - று.)

திவவினையும் (222), வனப்பினையும் (223), அகளத்தினையும் (224), பச்சையொடு (226) நரம்பினையுமுடைய (227) கேள்விக் (228) கூடுகொள் இயம் குரல்குரலாக (229), மரபிற்பண்ணி (230), எனவும் (231), எனவும் (232) எனவும் (233) எனவும் (234) நீ மொழியா அளவை (235) என்க. குறுகி (220)பண்ணி(230)மொழியாவளவையென(235)இயையும். 226-227 "தீங்தேனணிபெறவொழுகியன்ன வமிழ்துறழ்நரம்பினல்யாழ்" என்றது நோக்கத்தக்கது; இங்ஙன கூறுவது இசையினினிமையைப புலப்படுத்த. (228) முற்றிய - செய்யிய என்னும் வினையெச்சம். (232) இளையோர்க்கு மலர்ந்த மார்பினை-"விருந்தாயினையெதிரீயென விரைமாபகங்கொடுத்தாற்கு

அரும்பூண் அறவெறிந்தாங் கவணினதுழினியெனவே" என்றார் பிறரும். இனி, இளையோர் - மகளிருமாம்: "வணங்குசிலைபொருதநின் மணங்கமழகலம், மகளிர்க்கல்லது மலர்ப்பறியலையே," "மகளிர்மலைத்தலல்லதுமள்ளர், மலைத்தல்போகிய சிலைத்தார்மார்ப" என்பன காண்க.

புகழும்அளவையில் நல்லியக்கோடன் உபசரிக்கும்வகையைக் கூறுகின்றான் :—

மாசில்
காம்பு சொலித்தன்ன வறுவை யுடீஇப்
பாம்பு வெகுண்டன்ன தேற னல்கிக்
காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் றன்முன்
பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்
வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த
இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
ஆனா விருப்பிற் றானின் றூட்டி,

(இ - ள்.) (235) மாசு இல் (236) காம்பு சொலித்து அன்ன - குற்றமற்ற மூங்கிலின் ஆடையை யுரித்தாலொத்த, அறுவை - உடையினை, உடீஇ - உடுக்கப்பண்ணி, (237) பாம்பு வெகுண்டு அன்ன தேறல் நல்கி - பாம்பின் விஷமேறி மயக்கினாற்போன்ற மயக்கத்தையுண்டாக்குங் கள்தெளிவைத் தந்து,—(238) கா எரி ஊட்டிய கணை கவர் தூணி (239) பூ விரி கச்சை புகழோன் (காண்டவ)வனத்தை நெருப்பு உணணும்படி செய்த அம்பை யுள்ளேயடக்கின அம்புப்புட்டிலையும் பூத்தொழில்பரந்த கச்சையினையுமுடைய புகழ்பெற்ற அருச்சுனனது, தன்முன் - தமையனாகிய, (240) பனி வரை மார்பன் - இமயமலைபோலும் பரந்த மார்பினனாகிய வீமசேனன், பயந்த - செய்த நுண் பொருள் (241) பனுவலின் - நுண்ணிய விஷயங்களையுடைய பாகசாத்திரத்திற் கூறிய முறைமையில், வழாஅ - தவறுமற்செய்த, பல் வேறு அடிசில் - பலவேறுவகைப்பட்ட உணவை, (242) விசும்பில் வாள் நிறம் கோள் மீன் சூழ்ந்த (243) கதிர் இள ஞாயிறு எள்ளும் தோற்றத்து (244) விளங்கு பொன் கலத்தில் - ஆகாயத்திலே ஒளியையுடைய நிறத்தையுடைய கோளாகிய [கிரகங்களாகிய] நட்சத்திரங்கள் சூழ்ந்ததும் கிரணங்களையுடையதுமான இளஞ்சூரியனை [உதயகாலத்துச் சூரியனை] இகழுந் தோற்றத்தையுடைய விளங்குகின்ற பொற்கலத்திலே, விரும்புவன பேணி - (நீ) விரும்புவனவற்றை(த்தான்) விரும்பி மனத்துறக்கொண்டு, (245) ஆனா விருப்பின் தான் நின்று ஊட்டி - (நம்மிடத்து) மிகுகின்ற விருப்பத்தாலே தான் உடனிருந்து உண்ணப்பண்ணி;—(எ - று.)

நீ சிலமொழியாவளவை (235) உடீஇ (236) நல்கி (237) விரும்புவனபேணி (244) அடிசிலை (241) கலத்தில் (இட்டு) (244), தான் நின்று ஊட்டி (245) எனக. விரும்புவனபேணி என்றது - இன்னவாறு உணவு அமையின் இந்தப் பாணனுக்கு உவப்பாயிருக்குமென்று தன்மனத்திலாராய்ந்துபார்த்து அங்ஙனம் ஊட்டுகின்றானென்றவாறு. பாண்டவர் ஐவருள் இரண்டாமவனான வீமசேனன் சமைத்தல்தொழிலில் வல்லவனென்பது அன்னான் அஞ்ஞாதவாசகாலத்திற் புலாயனனென்னும் பெயர்பூண்டு விராட

ராசனிடத்துச் சமைக்குந்தொழிலாளியாக அமர்ந்ததனுற்பெறப்படும்: அவன் தந்த நுண்பொருள்பனுவல்என்றமையால் வீமசேனன் பாகசாஸ்த்ரமொன்று இயற்றினனென்பது, பெறப்படும். அக்கினி தேவனுடைய வேண்டுகோளின் படி காண்டவ வனத்தை எரிக்குமாறு அநுமதிகொடுத்த அருச்சுனன் அதற்கு இடையூறுசெய்த தேவதைகளை யொறுத்தோட்டியமை, பாரதத்தில் பிரசித்தம்.

இனி, அந்த நல்லியக்கோடன் பரிசில்களைத் தந்து விடுக்குமதைக் கூறுகின்றான்:—

திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புல மகற்றி
விறல்வேன் மன்னர் மன்னெயின் முருக்கி
நயவர் பாணர் புன்கண் டீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு
பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி
உருவ வான்மதி யூர்கொண் டாங்குக்
கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்டு
ஆரஞ் சூழ்ந்த வயில்வாய நேமியொடு
சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல
உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்
கருந்தொழில் வினைஞர் கைவினைமுற்றி
ஊர்ந்து பெயர்பெற்ற வெழினடைப் பாகரொடு
மாச்செல வொழிக்கு மதனுடை நோன்றாள்
வாண்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ,
அன்றே விடுக்குமவன் பரிசில்:

(இ - ள்.) (246) திறல் சால் வென்றியொடு - வலிமையமைந்த வெற்றியோடே, தெவ்வு - பகையை [குறுநிலமன்னரை], புலம் அகற்றி - (தத்தம்) நிலத்தைக் கைவிட்டுப்போகப் பண்ணியும், (247) விறல் வேல் மன்னர் மன் எயில் முருக்கி - வெற்றியையுடைய வேலைத்தாங்கிய முடிவேந்தர் நிலையாகத் தங்கிய அரண்களையழித்தும், (அவ்விடங்களிற் பெற்ற பொருளாலே), (248) நயவர் பாணர் புன்கண் தீர்த்த பின் - (ஆங்கு) விரும்பி வந்தவரின் புன்கண்மையையும் பாணரின்புன்கண்மையையும் போக்கிய பின், (மிஞ்சியனவாய்), (249) வயவர் - (தன்) படைத்தலைவர், தந்த - கொணர்ந்த, வான் கேழ் நிதியமொடு - நன்றாகிய நிறத்தையுடைய பொருள் திரளுடனே, (250) பருவம் வானத்து (251) உருவம் வால் மதி (250) பால் கதிர் பரப்பி (251) ஊர் கொண்டாங்கு - கூதிர்க் காலத்தையுடைய வானிடத்தே நிறைவடிவையுடைய வெள்ளிய சந்திரன் பால்போலும் கிரணங்களைப்பரப்பி ஊர்கோளைக்கொண்டாற்போல, (252) கூர் உளி பொருத வடு ஆழ் நோன் குறடு (253) ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு - கூரிய உளிகள்சென்று செதுக்கின உருக்களமூழ்ந்தின வலியினையுடைய குறட்டிடத்திறைத்த ஆர்கள்சூழ்ந்த சூட்டினையுடைய உருளையோடும், (254) சிதர் நனை முருக்கின் சிந்துதலையுடைய அரும்பையுடைய முருக்கஞ்செடியின், சேண் ஓங்கு நெடுஞ்சினை - விசும்பிலே செல்லவளர்ந்த நெடிய கொம்பிலே, (255) ததர் - பூங்கொத்து, பிணி

அவிழ்ந்த - முறுக்குநெகிழ்ந்த. தோற்றம்போல - தோற்றரவுபோல, (257) கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி - வலிய தொழிலைச்செய்யுந் தச்சருடைய கையாற்செய்யுந் தொழில்களெல்லாம் முற்றப்பெற்று. (256) உருக்குறு அரக்கு உள்எறிந்த போர்வை - உருக்கப்படுஞ் சாதிலிங்கம் உள்ளே வழிச்த பலகைகளையுடைய. (258) ஊர்ந்து பெயர்பெற்ற எழில் நடை பாகரொடு - எறிப்பார்த்து (உண்மையான ஓட்டமுண்டு என்று) பெயர்பெற்ற அழகிய நடையையுடைய தேரோடே, (259) மா செலவு ஒழிக்கும் மதன் உடை நோன் தாள் (260) வாள் முகம் பாண்டில் - (தன்னுடைய விரைவான நடையினால்) குதிரையின் நடையைப் பின்னிடச்செய்யும் அழகைக்கொண்ட வலிய காலையும் ஒளியினையுடையமுகத்தையுமுடைய எருதையும், வலவனொடு (அதனைச்செலுத்தும்) பாகனோடே. (261) பரிசில் - (யானை குதிரை அணி கலம் முதலிய) பரிசில்களையும். (260) தரீஇ-கொடுத்து, (261) அவன்-அந்த நல்லியக்கோடன். அன்றே விடுக்கும் - (சென்ற) அன்றே அனுப்பி விடுவான்: [பரிசில் நீட்டியான் என்றபடி]; (எ - று.)

(249) நிதியத்தையும் (258) பாகரோடும் (260) வலவனொடுங் கூடிய பாண்டிலையும், (261) பரிசிலையும் அவன் (260) தரீஇ (261) அன்றே விடுக்குவன் என இயைக்க. (246 249) வயவர் - தன்படைத்தலைவரான வீரர். தன் படைத்தலைவர் குறுநிலமன்னரையும் ஏவல் மன்னரையும் அழித்து ஆங்குப் பெற்றபொருளால் நயவர்பாணர்களின் புன்கண்மை [வறுமைத்துன்பம்] போக்கினபின் மிக்கனவாய்க்கொண்டு வந்த நிதியமென்க. குறடு - சந்திரனையும், நேமி ஊர்கோளையும்போலும். பார் மரத்தினாலியன்றதேரின் சுற்றுச் சுவர்; ஆகுபெயரால், தேரினைக் காட்டிற்று.

யாரிடத்துச் சென்றால் இவ்வாறெல்லாம்பெறலாமென்று ஒரு வினாவையெழுப்பிக்கொண்டு விடைகூறுகின்றான்:—.

மென்றோள்
துகிலணி *(யல்குல்) துலங்கியன் மகளிர்
அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்
மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பித்
துணிமழை தவழுந் துயல்கழை நெடுங்கோட்டு
எறிந்துரு மிறந்த வேற்றருஞ் சென்னிக்
குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்லிசை நிலைஇய பண்பின்
நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே.

(இ - ள்.) *(261) மெல்தோள் - மெல்லிய தோளினையும். (262) துகில் அணி அல்குல் - ஆடைசூழ்ந்த இடையினையும், துளங்கு இயல் - தளர்ந்த தன்மையினையுமுடைய, மகளிர்—, (263) அகில் உண விரித்த அம் மெல் கூந்தலின் - அகிற்புகையை யுண்ணுமாறுவிரித்த அழகிய மெல்லிய கூந்தல் போல (த் தோன்றும்படி). (264) மயில் மணி கலாபம் மஞ்சு இடை பரப்பி - மயில் நீலமணிபோலும் பீலிக்கண்களையுடைய தோகையை மஞ்சின்நடுவிற் பரப்புமாறு. (265) துணி மழை தவழும் - தெளிந்தமேகம் தவழப்பெற்ற, துயல் கழை - அசைகின்ற மூங்கிலையுடைய, நெடுங் கோடு - நெடியமலையினது,

* இந்தச்சீர் எடுக்கப்பட்டது.

(266) உரும் எறிந்து இறந்த ஏற்று அரு சென்னி - இடி செறிந்ததனுல் வழியாக்கின (அதற்கு முன்பு) எறுதற்கொழிற்கு அருமையான சிகரத்தை யுடைய, (267) குறிஞ்சி - குறிஞ்சிநிலத்திற்கு, கோமான் தலைவனும்.— கொய் தளிர் கண்ணி - கொய்யப்பட்ட தளிர்விரவின மாலையுடனே, (268) செல் இசை நிலைஇய பண்பின் - (பிறரிடத்து இல்லாமற்) போகின்ற புகழ் (தன்னிடத்தே) நிற்றற்குக் காரணமான குணத்தினையுமுடைய, (269) நல்லி யக்கோடனை—, நயந்தனிர்செலின் - விரும்பிசசென்றால்,—(எ - று)

முதுவாயிரவல! (40) வஞ்சியும்வறிது; அதுவன்றி (50) மதுரையும் வறிது; அதுவன்றி (67) உறந்தையும் வறிது: அதுவன்றி (83) எழுவர் பூண்ட ஈகைச்செந்நுகம் (113) ஒருதான்தாங்கிய (115) பெருமகன் (122) புரவலனுகிய (125) நல்லியக்கோடனை நயந்த கொள்கையொடு (126) முன் னுட்சென்றனமாக, இந்நாள் (129) அழிபசிவருத்தம் வீட (140) யானையொடு தேரெய்தி (142) யாம் அவணின்றும் வருதும்: நீயிரும் (143) செம்மலுள்ள மொடு செல்குவிராயின் (145). குறிஞ்சிக்கோமானுகிய (267) நல்லியக் கோடனை நயந்தனிர்செலின் (269) (வழியிற்பெறுமவற்றை யாம் கூறக் கேண்மின்): பட்டினம்படரின் (153) வயின்வயிற்பெறுகுவிர் (163); (அதன் பின்னர்) வேலூரெய்தின் (173) ஆமான்சூட்டின் அமைவரப்பெறுகுவிர்; (177) (அதன் பின்னர்) ஆமூரெய்தின் (188). சோறு (194) கலவையொடு பெறுகுவிர் (195); (அவ்விடத்தினின்று) அவன்மூதூர் (201) சேய்த்துமன்று; சிறிதுநணியதுவே. (202) (ஆண்டுச்சென்று) குறுகி (206) எத்த (209) எத்த (212) எத்த (215), எத்த (218), இருந்தோற்குறுகி (220), பாடுதுறைமுற்ற (228) இன்னிபத்தைப் (229) பண்ணி (230) நீ சிலமொழியாவளவை (235) அவன் (261) உடீஇ (236), நல்கி (237) அடிசிலை (241) கலத்தில் இட்டு (நீ) விரும்புவனபேணி (244) தான்நின்றூட்டி (245), தரீஇ (260) அன்றே விடுக்கும் (261) என இப்பாட்டுக்கு முடிபு காண்க.

இதிலுள்ள உவமைகள் வருமாறு:—(1) பணைத்தோள், (1-3) நில மடந்தை மார்பு துயல்வருமாரம் X கானியாற்றுப்புனல், (6) கதுப்பு விரித் தன்னகாழக நுணங்கறல், (7-8) அயில் X பரல், (13 14) பெயல் X கதுப்பு. (14-15) கதுப்பு X கலாபம், (16) மயிற்குளிக்குஞ்சாயல், (17-18) நாய்நா X அடி. (19-20) பிடிதடக்கை X குறங்கு, (20 21) குறங்கு X வாழை, (21-22) வாழைப்பூ X ஓதி. (27-28) பெண்ணை நுங்கு சேறு X எயிறு, (28 30) எயிறு X முல்லைமுகை, (31) மடமான் X நோக்கு, (34) பொன் வார்ந்தன்னநரம்பு, (49) எழுவுறழ்திணிதோள், (56) மகாரன்னமந்தி, (57) நகாரன்னமுத்தம், (70) ஒவத்தன்னவுண்டுறை, (71) கோவத்தன்ன கொங்கு, (72) முலையன்ன தாமரைமுகை. (74 75) அரக்குத்தோய்ந்தன்ன தாமரையிதழ். (122) புலித்துப்பு, (124) பெயன்மழைத் தடக்கை. (146) தாழை அன்னமபூப்ப, (147) செருந்தி தமனியமருட்ட. (148) முண்டகமணி கழா அல. (149) புன்னை நித்திலம்வைப்ப, (152) மணிநீர்வைப்பு (154-155) ஒட்டகந்துயில்மடிந்தன்னவீங்கு திமை, (157) மதியேக்கறூஉமுகம், (158) வேனேக்கின், (164) அவரைபவழங்கோப்ப, (165) காயாமயிலவிழ, (166) முசுண்டைகொட்டங்கொள்ள, (167) காந்தள்கைவிரல்பூப்ப, (173) வேனுதி யிற்பூத்தகேணி. (176) தேமாமேனி. (178) பூ கோதைதொடுத்தசினை, (181) பொன்வாய மணிசசிரல். (183-185) தாமரைப்போது கொங்குகவர் நீலச் செங்கட்சேவல் X மதிசேரரவு. (191) பிடிக்கையன்னபின்னு; (192) மகடூஉ மகமுறைதடுப்ப, (196) எரிமறுந்தன்ன, (197-199) பேயமகள் பிணனுண்டு

இரித்த எயிற்றுத்தோற்றம் X பிணனுகைத்துச்சிவந்த யானையின் பேருகிர், (205-206) மேரு கண்விடுத்தன்ன வாயில். (219-220) பன்மீனவெட்பான் மதிபோல இன்னகையாயமொடிருந்தோன், (221-222) ஊகம் பாம்பு பிடித்தன்ன கோட்டுச்செறிந்த திவவு. (223) மணிகிரைத்தன்னவனப்பு, (225-226) கானக்குமிழின் கனிநிறங்கடுப்ப விளைப்பொலிந்தபச்சை. (226-227) தேம்பெய்து அமிழ்தபொதிந்திவிற்றும்நரம்பு, (236) காம்புசொலித்தன்ன வறுவை. (237) பாம்புவெகுண்டன்னதேறல். (243-244) இளங்கதிர்ஞாயிறென்னும்தோற்றத்து விளங்குபொற்கலம், (250-253) கதிர்பரப்பிமதியூர் கொண்டாங்குக் குறட்டாரஞ்சூழ்ந்தநேமி, (254-256) முருக்குத்ததர்பிணியவிழ்ந்த தோற்றம்போல - உள்ளாக்கெறிந்தபோர்வை. (259-260) மாச்செலவொழிக்கும்பாண்டில், (263-264) அகிலுணவிரித்த வம்மென்கூந்தல் X மஞ்சிறைப்பரப்பிய மணிமயிற்கலாபம்.

இந்தச்சிறுபாணாற்றுப்படையில்—மலையினின்று யாற்றுத்திடரைச் சுற்றும் அருவியின்வருணனையும், கான்யாற்றுக் கருமணல் வருணனையும், விறலியரின் கேசாதிபாதவருணனையும், குடபுலம் தென்புலம் குணபுலம் இவையமைந்துள்ளவகையும், வஞ்சி கொற்கை மதுரை உறந்தையென்னும் நகரின் வருணனையும், எருமைகள் மேய்ந்துபடுத்திருக்கும் நிலையும், உமணர்வளர்க்கும் மந்தி மக்களுடன் கிலுகிலுப்பை விளையாடுதலும், எழுவள்ளல்களின் அருஞ்செயலும், நல்லியக்கோடனது குணவிசேடங்களும், வறுமை நிலையும், நெய்தல் நிலத்து எயிற்பட்டினத்துவாழும் நுளைச்சியர் உபசரிக்கும் வகையும், முல்லைத்தன்மையும், அங்குவேலூரில் எயிற்றியர் விருந்துபேணும்வகையும், சிச்சிலிப்பறவை மீனைக்கவருந்தன்மையும், மருதநிலத்து உழவர்மகளிர் விருந்தினர் திறத்து நடந்துகொள்ளும்வகையும், நல்லியக்கோடனது நகரத்துவாயிலின் வருணனையும், அவன் அறிஞர் முதலியோர் சத்தமக்கு ஏற்பக் குணங்களைப் புகழ ஆயமோடிருக்கும்நிலைமையும், யாழின்வருணனையும், பரிசில் பெறுவோன்ஏத்தும் வகையும், நல்லியக்கோடன் உபசரித்துப்பரிசிலீந்து விடுத்தலும் ஆகிய விஷயங்கள் கற்போர்மனத்துப் பசுமரத்தாணிபோல நன்கு பதியுமாறு மிகவும் இனிதாகக் கூறப்பட்டுள்ளமையைக் காணலாம்.

கேள்விகள்:-(1)சிறுபாணாற்றுப் படையைச் செய்தவர்யார்?என் இது அப்பெயர்பெற்றது?(2)நமது பாடத்திலுள்ள எழுவள்ளல்கள்யாவர்? மூவருடைய கொடைச்சிறப்பையும் தெரிவிக்க. (3)யாவரிடத்துச் செல்லுமாறு யார் யாரை ஆற்றுப்படுத்துகிறான்? (4)வாழைப்பூ. உயங்குநாய்நா,பெயல்: இவற்றிற்கு உபமேயப்பொருள்யாவை? (5) பாலைநின்றபாலை, மருதஞ்சான்றமருதம், துனிகூரெவ்வம்,நைவளம்பழுநிய பாலை அறற்குழற்பாணி தூங்கியவர்,முல்லைசான்ற கற்பு, வண்கோட்பெண்ணைவளர்த்த நுங்கின், இன்சேறிகுதருமெயிறு; அறிவு மடம்படுதலும் அறிவு நன்குணர்தலும், பைங்கண் ஊகம்பாம்பு பிடித்தன்ன, அம்கோடு செறிந்த அவிழ்ந்து வீங்குதிவவு: இவற்றை விளக்குக. (6)போகின்ற இரவலன் நல்லியக்கோடனை எவ்வெவ்வாறு கூறிப்புகழ்வான்?(7)ஓய்மானாட்டுக்குச் செல்லும்போது இரவலனுக்கு எங்கெங்கு எவ்வெவரால் என்னென்ன கிடைக்கும் என்று ஆற்றுப்படுத்துகிறவன் கூறுகின்றான்? (8) யாழுக்கு என்னென்ன உறுப்புக்கள் கூறப்பட்டுள்ளன? (9) செருந்தி, தாழை, முண்டகம், புன்னை இவை பூப்பன எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன? (10) நல்லியக்கோடன் எந்தக்குலத்தவன்? (11) மதிசேரரவுமானத் தோன்றுவது எது? (12) பேய்மகள் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளாள்? (13) முல்லையின் வருணனையை எழுதுக. (14) நல்லியக்கோடன் எவ்வாறு இரவலனை உபசரிப்பானென்று ஆற்றுப்படுத்துபவன் கூறுகின்றான்? (15) காவெரியூட்டிய இவர்களைத்துணி

......புகழோன் - யாவன்? இதிலுள்ள சரிதம் யாது? (16) இந்நூலால் நீவிர் அறிந்தபண்டைக்காலச்செய்திகள் நான்கு கூறுக. (17) I திறவாக்கண்ணசாய் செவிக்குருளை,கறவாப்பான்முலைகவர்தனோது, புனிற்றுநாய் குரைக்கும்புல் லெனட்டில், காழ்சோர் முதுச்சுவர்கணச்சிதலரித்த பூழிபூத்த புழற்காளாம்பி, ஒல்கு பசியுழந்த வொடுங்கு நுண்மருங்குல், வளைக்கைக்கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த, குப்பைவேளையுப்பிலி வெந்ததை, மடவோர் காட்சி நாணிக்கடையடைத்து. இரும்பேரொக்கலொடொருங்குடன்மிசையும் அழி பசி. II கைபுனை செப்பங்கலந்த மார்பிற், செய்பூங் கண்ணிசெவிமுதறிருத்தி,கோன்பகட்டுமண ரொகழுகையொடு வந்த. மகாரன்னமந்தி மடவோர், நகாரன்ன நளிநீர் முத்தம், வான் வாயெருந்தின் வயிற்றகத்தடக்கி...உமட்டியரீன்ற, கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலியாடும்: Iக்குப் பொழிப்புரையும் விசேடவுரையும் தருக. II பதவுரை கூறி, இதிலுள்ள உவமைகளைத் தனியே தெரிவிக்க. (18) மலைமூழ்கிச்,சுடர்தான் மாறிய செவ்வி நோக்கித்,திறல்வேனுதியிற் பூத்தகேணி,விறல் வேல்வென்றி வேலூர்-இவ்வடிகளிலுள்ள சரிதையைக் குறிக்க. (19) நல்லியக்கோடனை எத்துமவரெனக் கூறிய நால்வர் யாவர்? அவருள் இருவரைப் பற்றி இன்னார் இக்குணங்களை எத்துவர் எனத் தெரிவிக்க. (20) கிடங்கு, மாவிலங்கை. ஆமூர் என்பவற்றைப்பற்றி என்ன அறிவீர்?

அடுக்கிவரலுவமையைப்பற்றிய விளக்கம்: "அடுக்கியதோற்றம் விடுத்தல் பண்பே" என்பது, தொல்காப்பியத்து உவமவியற் சூத்திரம். இதன் பொருள்:—அடுக்கிவரும் தோற்றம்-உவமைக்கு உவமை அடுக்கிவருகிற தோற்றத்தை,விடுத்தல்-விட்டிடுவது,பண்பு-தக்கதன்மையாம் என்பது. ஆகவே.உவமையணியில் அடுக்கி வரலுவமையென்பது குற்றமென்பது, பெறப்படும்.விவரணம்:—"மதியத்தன்ன வாண்முகம்போலும், பொதியவிழ் தாமரைப் புதுப் பூம் பொய்கை" என்பதில், தாமரை என்ற உபமேயத்துக்கு முகம் உவமை: உவமையாக வந்த இந்த 'முகம்' என்பதற்கு மதியம் என்று உவமை கூறியிருப்பதால், இது "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்ற சூத்திரத்தால் விலக்கப்பட்ட அடுக்கிவரலுவமையாம் "ஈர்ந்து நிலந்தோயும் இரும்பிடித்தடக்கையிற், சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குரங்கென, மால்வரையொழுகிய வாழைவாழைப். பூவெனப்பொலிந்த வோதி" என்ற சிறுபாணாற்றுப்படை(21-24)அடிகளில் அடுக்கிவரலுவமையில்லை. ஏனெனில்?—விறலியருடைய குறங்கைப் பிடித்தடக்கையின் சேர்ந்துடன் செறிந்த என்றார்: பின்னர் அகுறங்கையுடைய அந்த விறலியரின் ஓதிக்கு உவமையாக வாழைப்பூவைக் கூறினர்: அங்ஙனம் உவமையாகக் கூறப்பட்ட 'வாழைப்பூ'என்றதொடரிலுள்ள வாழைக்கு 'குரங்கென' என்று உவமை கூறினாரேயன்றி, வாழைப்பூவுக்கே உவமை கூறவில்லை:ஆனால், உவமையாக வந்திருக்கின்ற'குறங்கென'என்பதற்குத்தடக்கையின் என்று உவமை கூறியுள்ளாரே:இது உவமைக்கு உவமை வந்ததன்றோ எனின்?—அன்று:முதலிலுள்ள 'குறங்கின்'என்பது உபமேயமாய் நின்று 29-அடியிலுள்ள விறலியர் என்பதைக் கொண்டுபோய்முடிகின்றது: பின்னர் வேறாக வந்த உவமையாகிய குரங்குஎன என்பதே,வாழையைக்கொண்டு முடிகிறது:எனவே,உவமைக்கு உவமை எங்கே கூறப்பட்டுள்ளது? இல்லையன்றே: ஆகவே அடுக்கிவரலுவமை என்று இதனைச் சொல்வதற்குஇல்லை. "இலங்குவளையன்ன நலங்கெழாம்பற். போதினன்னதாதவிழ்கைதை" என்ற இடத்து கைதையாகிய உபமேயத்துக்கு உவமையாக வந்தது, ஆம்பற்போது: உவமையான அந்த ஆம்பற்போது என்பதற்கும் இலங்குவளையன்ன என்று வேறு ஓர் உவமை கூறப்பட்டிருக்கின்றது; அதனால், இது தொல்காப்பியனாரால் விலக்கப்பட்ட அடுக்கிவரலுவமையாம்: ஆகவே இங்ஙன் வருதல் கூடாது என்க.

அகளம்-யாழின்குடம்போன்றஉறுப்பு
அசைஇ - நடந்து, வருந்தி
அணங்கு - வடிவு
அண்ணல் - தலைமை
அமலை - சோற்றுக் கட்டி
அரி - இரேகை
அலவன் - ஞெண்டு
அவைப்பு - குற்றுதல்
அறல் - கருமணல், தாளவறுதி
ஆசு - குற்றம்
ஆயம் - மகளிரின்திரள்
இகுதல் - தாழ்தல்
இயம் - வாச்சியம்
இலிற்றுதல் - துளித்தல்
ஈரம் - அருள்
உகைத்து - காலாலேதள்ளி
உமணர் - உப்புவாணிகர் : இதன் பெண்பால் உமட்டியர்
உயங்குதல் - வருந்துதல்
உரவு - வலிமை
உருப்பு - வெம்மை, உருமு - இடி
உழத்தல் - வருந்துதல்
உளர்தல் - அசைத்தல்
உறு - மிகுதி
உறைத்தல் - துளித்தல்
எயில் - மதில்
எயிற்றியர் - எயினமகளிர்: பாலை நிலத்துமாக்கள் எயினரெனப்படுவர்: முல்லைகுறிஞ்சிதிரிந்து பாலையெனப்படும்.
எருத்து - கழுத்து
எருந்து - கிளிஞ்சில்
எவ்வம் - வருத்தம், எழு - கணையம்
ஏக்கறுதல் - (தனக்கு)இல்லாமையால் ஒன்றினிடத்துவிருப்பங் கொள்ளுதல்
ஏமம் - காவல்
ஏற்று - ஏழமை
ஐது - மெல்லிதாக
ஐம்பால் - ஐந்துவகையாகக் கைசெய்யப்படுவது: கூந்தல்
ஒக்கல் - சுற்றம், ஒதுங்கி - நடந்து
ஒழுங்குதல் - ஒழுங்குபட வளர்தல்
ஒழுகை - வண்டி யொழுங்கு
ஓதி - அளகம், ஓவம் - சித்திரம்
கஞலுதல் - நெருங்குதல்
கடாவுறுத்த - செலுத்த
கணம் - திரட்சி, கூட்டம்
கண்ணி - ஒருவகைமாலை
கண்விடுத்தல் - கண்விழித்தல்
கதுப்பு - மயிர், கய - பெரிய
கருமறி - வெள்ளாட்டுக்குட்டி
கலிங்கம் - ஆடை
கவான் - துடை, பக்கம்
கவின் - அழகு
கவைதாள் - பிளவுபட்டகால்
கழல் - உழலுகின்ற, வீரக்கழல்
கறங்குதல் - ஒலித்தல்
கறி - மிளகுகொடி
காமரம் - ஓர்பண் [வயிரம்.
காழ் - கருநிறம், வீட்டுக்கூரைக்கழி
காளாம்பி - காளான்
குட்டம் - ஆழம், குரம்பை - குடில்
குருளை - குட்டி
குழல் - ஓர்மீன்
குளவி - காட்டுமல்லிகை
குறங்கு - துடை
குழைதல் - துணிதல்
குறைத்தல் - கிள்ளிப்பறித்தல்
கேணி - சிறுகுளம்: சிறுகுளத்தைக் கேணியென்பது அருவாநாட்டுத்
கேழ் - நிறம் [திசைச்சொல்.
கேள்வி - இராகம்
கொங்கு - தாது, தேன்
கொட்டம் - பனங்குருத்தாற் செய்யுஞ் சிறியபெட்டி: கொட்டை - நூற்கின்றகொட்டை
கோடியர் - கூத்தர்
கோதை - மாலை
கோபம் - பட்டுப்பூச்சி [பூச்சி
கோவம் - இந்திரகோபம்: பட்டுப்
கோள் - குலை
சமம் - போர்
சாய்தல் - ஒடியிளைத்தல்
சாவம் - வில், சிதல் - கறையான்
சிதர் - வண்டு, சிதறுதல்
சிரல் - சிச்சிலிப்பறவை
சுணங்கு - அழகுதேமல்
சுவல் - கழுத்து
சூட்டு - சுட்டது, வண்டியின்வட்டை
சூல் - கருப்பம்
செப்பம் - ஓர் அணி: செந்நிறமென் பாருமுளர். [சத்தான்.
செம்பியன் - சோழன்: சிபியின்வழி

செம்மல் - பூவின்வாடல், தலைமை
செழியன் - பாண்டியன்
சேய்வரல் - தூரத்தினின்றுவருகை
சேர்ந்து - இரண்டு
சேறு - செறிந்தநீர்
சொலித்தல் - உரித்தல்
தண்பணை - மருதநிலம்
ததர் - கொத்து, நெருங்குதலுமாம்.
தத்துதல் - மறிதல்
தமனியம் - பொன்: தபநீயம் என்ற வடசொற் சிதைவு.
தயங்குதல் - அசைதல்
தறுகண்மை - கொடுமை
திறல் - வலிமை
துயல்வருதல் - இடர்தசைதல்
துனி - வெறுப்பு
தைவருதல் - தடவுதல்
நகார் - பல்
நளி - செறிவு
நனை - அரும்பு, தோன்றுகை
நாகம் - சுரபுன்னை, பாம்பு
நாகு - இளமை
நித்திலம் - முத்து
நிழல் - ஒளி
நீர்வைப்பு - உப்பங்கழி
நுகம் - இலக்கணையால், பாரமென்ற பொருளைபுணர்த்திற்று.
நுசுப்பு - இடுப்பு. நுதி - முனை
நுளைமகள் - நுளைச்சாதிமகள்: நெய்தனிலத்துமாக்கள் நுளையர் எனப்படுவர்.
நோன் - வலிமை
பகடு - எருது, பெருமை
பச்சை - பத்தரின்போர்வை
படப்பை - தோட்டம்
படு - குளம், மடு
பட்டினம் - கடற்கரையையடுத்துள்ளவூர்
பணை - மூங்கில், வயல், பருத்துள்ள தன்மை. பதம் - செவ்வி
பரிகாரம் - வேண்டுபொருள்: பரிகரம் என்பதன்திரிபு
பள்ளி - படுக்கை
பாகர் - தேரின் சுற்றுச் சுவராகச் செய்தபலகை. தேர்க்கு ஆகுபெயர்.
பாசடை - பசியஇலை
பாலை - வெம்மை, பாலைத்தன்மை.
பிடி - பெண்யானை
பிதிர்தல் - பரத்தல்
பிறங்குதல் - மிகுதல்
புரி - முறுக்கு, புலம் - நிலம்
புழல் - துவாரம்
புறம் - முதுகு, இல்லாவிடத்துப் பழிதூற்றுதல்
புறவு - காடு, புனல் - நீர்
புனிறு - ஈன்றணிமை
பூட்கை - வலிமை, எண்ணம்
பெண்ணை - பனை
பொய்கை-மானிடராக்காத நீர்நிலை
பொருநர் - பாடிப்புகழ்வோர்: இவர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப்பலராவர்
பொதித்தல் - அடையாளமாக வைத்தல்
மதன் - வனப்பு: வலியுமாம்
மராம் - கடப்பமரம்
மருதம் - ஊடுதலாகிய ஒழுக்கமும், மருதநிலமும்
மருமான் - சந்ததியிற் பிறந்தவன்
மறிதல் - சாய்தல். மறுகு - தெரு
மா - குதிரை, மாமரம்
மீக்கூற்றம் - மேலாகிய சொல்
முகை - மொட்டு
முல்லை - ஆறியிருக்கும் ஒழுக்கம், காடுசேர்ந்த இடம்.
முதுமை - பேரறிவு
வயவர் - வீரர். வரிசை - தரம்
வரிநிழல் - செறியாதநிழல்: இட்டுத்திட்டானநிழல்
வறல் - உலர்தல்
வாங்குதல் - வளைதல்
வால்உளை - வெள்ளிய பிடரிமயிர்
விடர் - மலைமுழைஞ்சு
வியல் - பெரிய
விரை - மணம்
விளைதல் - முற்றுதல்
விறல் - சத்துவம்: அஞ்சத்தக்கது முதலியன கேட்டவிடத்துப் பிறந்த உள்ளநிகழ்ச்சியால் தோன்றும் நடுக்கம முதலியன: விறல்பட ஆடுவோர் - விறலியர்.
வீ - மலர்
வையம் - பூமி, வண்டி.